# பத்தினிக் கோட்டம்



வெளியீடு :

பத்தினிக்கோட்ட அறநிலை
பூம்புகார் — தஞ்சாவூர் மாவட்டம்
தமிழ்நாடு.



அறநிலைக் காப்பாளர் :

தாசில் பண்ணை கௌரியம்மாள்

தாசில் பண்ணை இரா. இராஜசேகரன்



# சிலப்பதிகார
# மங்கல வாழ்த்துப் பாடல்

திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர் தார்ச்சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்கண் உலகளித்த லான்
ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
காவிரி நாடன் திகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்
மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்
நாமநீர் வேலியுலகிற்கு அவன் அளிபோல்
மேல்நின்று தான்சுரத்த லான்
பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்
வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோடு
ஓங்கிப் பரந்தொழுக லான்



## முன்னுரை

### சிலப்பதிகார மாநாடு

*பதியெழு அறியாப் பழங்குடி கெழீஇய பொதுவறு சிறப்பின் புகார் எனப்படும் காவிரிப்பூம்பட்டினம், தன் பண்டைச் சிறப்பெல்லாம் மறைந்து சிற்றூராய்த் திகழ்ந்து வரும் காலம். பூம்புகாரின் பழம் சிறப்பினை மீண்டும் கொண்டுவரும் முகத்தான் நல்லறிஞர் முதல் எழுத்தறிவு இல்லாத பாமரர் வரை அனைவரும் போற்றும் வண்ணம் எனது சுவீகாரத் தந்தையார் தாசில் பண்ணை திரு. K. S. இராமலிங்கம் அவர்கள் 15, 16, 17—6—1951 ஆகிய நாட்களில் புகார் நகரில் சிலப்பதிகார மாநாடு நடத்தினர்கள். பூம்புகார் வளர்ச்சியிலே சிலப்பதிகார மாநாடு ஒரு திருப்பு முனையாகவே அமைந்தது. அந்த மாநாட்டின் போதே என் சுவீகாரத் தந்தையார் அவர்கட்குப் பத்தினித் தெய்வமாம் கண்ணகிப் பெருமாட்டிக்குக் கைவினை முற்றிய தெய்வப் படிமம் ஒன்று எழுப்ப எண்ணம் கருக்கொண்டது.*

### பத்தினிக்கோட்டம் எழுந்த வரலாறு :

*பொற்கோட்டு இமயத்துப் பொருவறு பத்தினிக்குக் கற்கால் கொண்ட சேரன் செங்குட்டுவன் கனகவிசயர் தம் கதிர் முடிமேல் ஏற்றி,*

> “வித்தகர் இயற்றிய விளங்கிய கோலத்து
> முற்றிழை நன்கலம் முழுவதும் பூட்டிப்
> பூப்பலி செய்து, காப்புக் கடை நிறுத்தி
> வேள்வியும் விழாவும் நாள்தொறும் வகுத்து”

*சேர நாட்டிலே கடவுண்மங்கலம் செய்தான். அதன் பின்னர் மன்னர் பலரும் தத்தம் நாட்டிலே கண்ணகிப் பெருமாட்டிக்குப் பத்தினிக்கோட்டம் எழுப்பியதாக வரலாறு*

கூறுகின்றது. அவையெல்லாம் இந்நாளில் இருக்குமிடம் தெரியாது போயிற்று. மேலும் அப்பெருமாட்டி தோன்றிய பூம்புகார் நகரிலேயே பத்தினிக்கோட்டம் எழுப்பினுல் நலமாக இருக்கும் என்று எண்ணி எனது சுவீகார அன்ணையாரும் தந்தையாரும் ஆன கௌரி அம்மாள், இராமலிங்கம் இருவரும் திட்டம் வகுத்தனர். கவிச்சுடருக்கு ஆண்டுதோறும் விழா எடுக்கும் கம்பன் அடிப்பொடி காரைக்குடி திரு. சா. கணேசன், அவர்களும், கல்லினுல் கண்ணகி கோயில் எழுப்பலாம் என்றுரைத்து. "பத்தினிக் கோட்டம்" எப்படியெல்லாம் அமைக்க வேண்டும் என்று திட்டமும் வகுத்து, மாமல்லபுரம் சிற்பப்பள்ளி முதல்வர் திரு. கணபதி ஸ்தபதி அவர்களைக் கொண்டு அழகிய தெய்வப் படிமமும் சமைத்துத் தந்தார்கள். 4—11—68ல் இப் பத்தினிக் கோட்டத்திற்குச் சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் இன்றைய தமிழக முதல்வர் மாண்புமிகு மு. கருணுநிதி அவர்களால் கால் கோள் விழா செய்யப் பெற்றது. திருமிகு. ராமச்சந்திர ஸ்தபதி அவர்கள் தலைமைத்தச்சர் பொறுப் பேற்கக் கல் தச்சர்கள் பலராலும் அரும்பாடுபட்டுக் கல் கொண்டு வந்து சேர்த்துக் பத்தினிக் கோட்டம் பூம்புகார் நகரில் எழுந்தது. பரிதாபி ஆண்டு வைகாசித் திங்கள் 26ம் நாள் வியாழக்கிழமை காலை 10–45க்கு மேல் 12–30 மணிக்குள் (8–6–1972) பத்தினிக் கோட்டக் குடநீராட்டு விழா உலகம் உவப்ப நடைபெற்றது. "பத்தினிக் கோட்டமும் சமைத்து, நித்தல் விழாவணி நிகழ்வித்தோன்" என்று சிலப்பதிகாரம்கூறும் வண்ணம் நித்தம் விழாவணி இப்பத்தினிக் கோட்டத்தில் நிகழப்பெற்று வருகின்றது.

இக்கோவில் திருப்பணி முற்றிலும் தாசில் பண்ணைக் குடும்பத்தினரால் செய்யப்பெற்றது. இது இக்குடும்பத்தினர் தனி உடைமையாகும். தொடர்பான அனைத்துரிமைகளும் அதன் அறநிலைக் காப்பாளர்களான கௌரியம்மாள், இரா. இராஜசேகரன் ஆகிய இருவரையும் அவர் வழித் தோன்றல்களையும் சாரும்.

**கண்ணகித் திருநாள்**

கண்ணகி விடு பேறடைந்த நாள் ஆடித்திங்கள் சுக்கில பட்சத்துச் சப்தமி ; அல்லது அனுஷ நட்சத்திரம்

"ஆடித் திங்கள், பேர் இருட்பக்கத்து, அழல்சேர்
குட்டத்து அட்டமி ஞான்று,"

மதுரை எரியுண்டது;

அந்நாளைக்கு 14 நாட்கள் கழிந்த பின்னர் கோவலனோடு வான ஊர்தி **ஏறித்** துறக்கம் சென்றாள் கண்ணகி. எனவே கிருஷ்ண பட்சத்து அட்டமியிலிருந்து 14 நாள் கழிய சுக்கிலபட்சத்துச் சப்தியாகும். அல்லது நட்சத்திர முறையில் கணித்தால் கார்த்திகையிலிருந்து 14 நாள் கழிய அனுஷ நட்சத்திரமாகும். வீடுபேறடைந்தவர்களை நட்சத்திரம் கொண்டே வழிபடுவது நம் மரபு. எனவே, கண்ணகித் திருநாளை ஒவ்வோராண்டும் **ஆடி மாதம் அனுஷ நட்சத்திரத்திலே** கொண்டாடுவது என நெறிப் படுத்திக்கொண்டுள்ளோம்.

**நன்றி**

இந்நூல் உருவாவதற்கென "பத்தினிக் கோட்டம்" கட்டுரை எழுதித் தந்த கம்பன் அடிப்பொடி காரைக்குடி திரு. சா. கணேசன் அவர்கட்கும், "பத்தினித் தெய்வம்" கட்டுரை எழுதித் தந்த மாயூரம் பேராசிரியர் திரு. தி. வ. காந்திமதிநாதன் அவர்கட்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த நேரத்தில் திருமிகு சா. கணேசன் அவர்களைப் பற்றிச் சில செய்திகள் கூறக் கடப்பாடுடையவன். பத்தினிக் கோட்ட அமைப்பு, பத்தினித் தெய்வப்படிம அமைப்பு இரண்டையும் தனது தீர்க்கமான சிற்ப, சிலப்பதிகார நூலறிவினால் எழிலுறச் செய்து, கண்ணகி வழிபாடு, திருநாள் நடத்துதல் இவற்றின் வழிமுறைகளை வகுத்துக் கொடுத்த அப் பெருந்தகைக்கு எவ்வாறு நன்றிசொல்வது? அச்சுப்படிகளைச் செப்பனிட்ட மாயூரம் அ. வ. அ. கல்லூரி விரிவுரையாளர் திரு. அ. கலியபெருமாள் அவர்கட்கும், பல்லாற்றானும் துணைபுரிந்த அ. வ. அ. கல்லூரி வணிகயியல் பேராசிரியர் திரு. ஐ. கந்தசாமி அவர்கட்கும். குறுகிய காலத்தில் அச்சிட்டுக் கொடுத்த கும்பகோணம் ஜெமினி அச்சகத்தாருக்கும், என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**இரா. இராஜசேகரன், பூம்புகார்.**

---

குறிப்பு: காவிரிப்பூம்பட்டினம் (பூம்புகார்) சீர்காழி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கில் 12 கல் தொலைவிலும், மாயூரம் ஜங்ஷனிலிருந்து கிழக்கில் 16 கல் தொலைவிலும் உள்ளது.



## பத்தினித் தெய்வம்
## கண்ணகி

நெல்வடிக்கும் காவிரிதான் பாய்ந்து கஞ்சி
நிலம்வடிக்கும் பூம்புகாரில் பிறந்து, வெற்பில்

வில்வடிக்கும் திறற்சேரன் விழா வெடுக்க
விதிவடிக்கும் வள்ளுவனுர் காட்டும் பெண்ணுய்ச்

சொல்வடிக்கும் நாவண்ணம் தன்னில் நின்று
சுடர்வடிக்கும் தலைமகளாய்த் திகழ்வாய்; இங்கே

கல்வடிக்கும் கைவண்ணம் தன்னில் நின்று
கலைவடிக்கும் சிலைமகளாய்த் திகழ்வாய் போற்றி!



# PATHINI - K - KOTTAM

[ TEMPLE OF KANNAKI ]

— R. Rajasekaran, B. SC., B. L.,

Poompuhar popularly known as Kaveripoompattinam, was one of the most flourishing ancient cities of Tamilnadu (South India). Being a great sea-port at the mouth of river Cauvery it was a thoroughfare for foreign vessels carrying several races of people speaking different languages, and a wide varietv of merchandise to be exchanged for that of Tamil Nadu. No wonder then Poompuhar was a very prosperous city in which merchants of international reputation led princely life. One among them was Manaikan, a famous philonthrophist. His daughter Kannaki-the heroine of the famous first Tamil epic Silappathikaram was more beautiful than the word beauty itself. Her charmness and purity of mind-the two laudable qualities were lavishly praised by all who knew her. She was given in marriage to Kovalan, son of Masathuvan, another equally wealthy merchant. The marriage was performed with such pomp as was seldom seen even in the rich city of Poompuhar.

Sweet and pleasant were the early years of their married life. Kovalan grew poetic in describing the beauty of Kannaki who reciprocated the love through the silence of her modesty.

Mathavi, a popular dancer of Poompuhar, sang and danced with such exquisite skill and grace in the court of the great King Karikalan as she became the recipient of the highest award namely a necklace of 1008 gold coins. As if Fate which seemed to be jealousy of Kannaki - Kovalan's happy married life decided to play its role. Thus being charmed by her performance Kovalan purchased that necklace to be presented again to Mathavi. He had been enslaved by the charmness and histrionic talents of this damsel. He had not only deserted Kannaki, his hitherto beloved wife but even forgotten her altogether.

To Kovalan and Madhavi who lived almost a married life, a child was born. As everything has an end Kovalan Madhavi's life too had to meet with an end under tragic circumstances; again the role of fate !

Indira Vizha, a national festival of Tamilnadu for which people from far and near places used to congregate on this Poompuhar beach, was celebrated in a grand manner. Madhavi accompanied by Kovalan went to the beach when the latter sang a lyric to the accompaniment of a harp conveying the cravings of a loving hero's heart. As ill-luck would have it, Madhavi misconstruing the song as an expression of Kovalan's love for some other woman got the harp from her partner and sang as though she too was in love with somebody else ! And Kovalan who was overtaken by suspicion quit the place abruptly with a wounded heart, leaving Madhavi alone in the beach.

As an ideal wife, Kannaki, the embodiment of Tamil Culture, received her husband Kovalan (who had already lost all his health and wealth) with a warm heart and a smiling face when he came back to her from Madhavi after a long interval.

Being moved by Kannaki's grief-stricken thin body, Kovalan consoled her with kind words and felt ashamed and sorry for the loss of his entire wealth on Madhavi. Promptly came Kannaki's offer of her pair of anklets. With a firm determination of regaining his lost wealth Kovalan suggested that with the anklets as capital he would again trade in the city of Madurai and Kannaki should accompany him to the city. Scarcely had Kovalan made this suggestion when Kannaki got herself ready for the journey-implicit obedience !

On the way to Madurai they met Kavunthi, a jain nun who was very helpful to them throughout their journey. She then entrusted the couple to the care of Madhari, a shepherdess in the outskirts of the city of Madurai, emphasising at the same time the greatness of Kannaki-the very divine form of chastity.

Then Kovalan took one of Kannaki's anklets and proceeded to the bazzar to dispose it off. By an irony of fate he happened to meet the chief jeweller of the Pandian King. Being an arrant rogue of the goldsmith class this jweller had stolen a similar anklet belonging to the Pandyan queen. To conceal his stealing and to label Kovalan as thief he asked

Kovalan to wait in his cottage till his return from the Palace after meeting the king who alone might purchase the anklet.

Accordingly, he informed the king of the discovery of the stolen anklet. King Nedunchezhian instead of saying "Bring him to be killed." had in a thoughtless manner uttered the fatal words: "Kill him and bring the anklet".

An illiterate intoxicated executioner beheaded Kovalan.

This news spread the whole city of Madurai. The shepherdess Madhari noticed all kinds of ill omens-milk not curding in the jar, eyes of bulls-full of tears, butter not melting in the pan, silent lambs, droping out of the tiny bells froms the cow's necks all indicating,

"Tragedy was about
Disaster was abroad
Catastrophe was in"

Kannaki who heard the news burst into tears, fainted and then regained consciousness. Finding the whole shepherd folk mute, the anguished Kannaki addressed the Sun to be the witness and say whether her husband was a thief. A voice from the sky (as if the Sun replied to her) that her husband was not a thief and the city of Madurai would be doomed to be destroyed by fire, was heard.

With tears in her eyes, Kannaki rushed to the place where Kovalan was executed. She saw his body in a pool of blood and embraced him. She fancied that he stood up, wiped the tears and after asking her to stay, ascended to heaven.

Though Kannaki had no desire to live anylonger her husband's request to stay was interpreted by her as to indicate that she might live to prove that her husband was innocent and to take revenge on the nefarious king who had caused the death of her beloved husband.

Then she rushed to the king's Court and accused him of killing her husband. The king justified his action by saying that her husband was put to death because he was a thief. Immediately she broke the anklet considered to have been stolen by Kovalan and the rubies in it, fell out, some striking even the king's mouth. (The Pandya Queen's anklet was filled with pearls. So the anklet brought by Kovalan for sale was not the stolen one) Being convinced that he had been deceived by the mischievous jeweller the king lamented that he had brought disgrace to the long line of Pandya Kings, and crying that he was not a King but a thief swooned on the throne and breathed his last. The Pandya Queen too droped down dead. Then Kannaki, with bitterness of anguish went off the Palace, twisted and tore her left breast from her chest and threw it in the street of Madurai the capital city of the Lord Vaigai. And Madurai was enveloped by fire.

Kannaki then cried, "I entered the city through the eastern gate with my husband. Now I go alone through the western gate". Therefrom she walked along the banks of Vaigai and reached the hills of the Chera Country. The Kuravas (hunter folk) of that region saw her and exchanged word with her. Before the very eyes of the hunters she ascended to heaven in a chariot brought by Kovalan accopanied by Indra and other Angels.

Chera King Chenkuttuvan with his Queen and the Royal party was enjoying the beauties of Nature on the banks of river Periyar. It was there he knew the famous episode of Kannaki from the Poet Sathan and his Queen requested her husband to raise a temple for Kannaki. The equally proud King in ready compliance with the request nerved to obtain stone from Himalayas to make image of Kannaki. After ceremoniously immersing it in the holy waters of Ganges and Cauvery he got the statute of Kannaki, the Goddess of Chastity, carved out of it. Soon the temple was ready.

**History repeats itself.**

Today one may be tempted to fancy that as though - of course in accordance with Codes of Silappathykaram - the Queen and King Cheran Chenkuttuvan have reincarnated themselves in Thasilpannai Gouri Ammal and her husband K. S. Ramalingam at Poompuhar, the native town of Kannaki.

The famous historical Silappathikaram Conference was held in the year 1951 under the able presidentship of Sri. R. K. Shanmukam Chettiar, the first Finance Minister in the Independent India. Thasil Pannai Ramalingam was the chairman of the Reception Committee. It was at that time the idea of installing a statue for Kannaki flashed in his mind. And he got the graceful statue by the adept sculptor Ganapathi Sthabathi. The statue was put in exhibition in the Second World Tamil Conference at Madras and was indeed admired and appreciated by all-Indians as well as foreigners.

But later on, his consultation with his wife Thasil Pannai Gouri Ammal brought a better counsel and the idea of mere installation of the statue was improved by that of erecting a temple.

To translate this modified but noble idea into reality Sri. Sa. Gansesan's counsel was sought. And the foundation stone for the temple was laid on 4–11–1968 by Kalaingar Karunanithi, then P. W. D. Minister for Madras State, under the presidentship of Silampuchelvar M. P. Sivanganam.

The statue was duly installed in the sanctum sanctorum and the consecration took place on a grand scale on 8–6–1972.

This Pathini-K-Kottam (Temple of Kannaki) is a private Temple belonging to Kaviripoompattinam Thasil Pannai family which met the entire expenditure for the erection of the above temple. Thasil Pannai

Gouri Ammal and her son R. Rajasekaran B. SC., B. L., are the trustees. Thus the erection of temple is the the sweet fruit of the mature delibrations of Gouri Ammal and her husband K. S. Ramalingam – Rein carnation of the Queen and King Cheran Chenguttvan indeed !

### Kannaki's (Statute) divine appearance

Chistled in classical style the image wears a divine appearance from top to toe. The radient crown on the head, the mother star on the right side, attractive ornaments, the beautiful fore head resembling the teened moon, bow like brow, fish like eyes, Gingly flower like nose, smiling lips, the flower like face, hair locks kissing the face (like bees) the right hand holding the anklet while the left hanging freely and gracefully, the thin waist, the straight posture with both the feet resting evenly on the pedestal indicating the impartial attitude, the merciful look, the expression of meekness of the tender hear contribute to the divinity.

According to the hoary sculptural tradition of the Tamil when an image is to be carved out, more consideration will be bestowed on the traits of the character of the person than to the physical features. The statue silently but amply echos the impressions gained about Kannaki. This is what is known as "image" in English "Pradiman" in sanskrit and "padimam" in Tamil. Expressing of the mental vision is the real art.

Elangovadigal, the author of the Epic story by introducing the following lines which form the essense of our idea about Kannaki in Silappadhikaram presents before our mental eye the characterestics of Kannaki. Such a mental picture gets the name vision.

"போதில் ஆர் திருவினுள் புகழ்உடை வடிவு என்றும்,
தீது இலாவடமீனின் திறம் இவள் திறம் என்றும்,
மாதரார் தொழுது ஏத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் ; பெயர் மன்னும் கண்ணகி என்பாள் மன்னோ"

From these lines we get an idea about Kannaki's physical features and her chastity. Kannaki's beauty resembles the praiseworthy beauty of Goddess Laksmi who abides in the Lotus. To her chastity, the constancy of the Northern star Arunthathi can be cited as an example. All the virtues held in high esteem by the women folk are in her possession.

This is the concise but sweet and praiseworthy description given by Elangovadigal. So Lakshmi's beauty and Arunthathi's chastity have become her characteristic features. Both of these are indispensable for a Sculptor. Giving shape to the former viz. the beauty of Lakshmi is the noted dexterity and craftmenship of Tamil sculptors but bringing out the prominence of chastity remains a problem. The sculptor is confronted with the great task of bringing out an idea about conduct in the figure. Incidents make posssible for the readers of Silappadhikaram to understand and appreciate the chastity of Kannaki. Like the sculptor, Elangovadigal also had to face this difficulty in the beginning. In order to impress our minds regarding the chastity of Kannaki, the constancy of the

Northern star Arunthathi has been pointed out as a symbolic representation of Kannaki's chastity by Elangovadigal. The sculptor also felt that through such symbolism alone it is possible to impart this idea. So the Northern star had been carved out on the head. In the traditional sculptures, carving out the salient features and special symbols of every deity is quite common. Thus three eyes for Siva, four heads for Birma, wheel for Vishnu are used to be carved out; so also to Kannaki the symbol of silambu for easy cognizability of the statue at the very sight had been employed.

More over, it must be mentioned here that the presence of courage and meekness on the face of the divine image being skillfully carved out, has won the admiration of all the artists. As this idol has been made out in a meek form, its worshipers will enjoy innocent pleasures, prosperity, fertility of the soil; and wealth will be augmented.

That some of the noteworthy features of Kannaki's statue which has been recently found out in Kerala are also present in this idol can be realized by those who have seen both the statues. Ancient sculptors, here carved out in the old statue, the ear-ring known as Kuthambai, elongated ears with lobe and the hair fastened together upward over the head.

In the epic Silapathikaram there is a reference about the heroine's loss of a breast. Some are of opinion that the statue also must be made accordingly. The sculptor who carved this statue is not

unaware of this fact. But as per the convention of the sculptural art, the image should not be made with any such imperfection.

Deity has power to see all the directions. As the meaning of the term Lakshmi is one who could see everything, this graceful Goddess also has capacity to know everything.

## The Temple

The temple erected for the worship of Goddess of chastity is simple but has an attractive appearance. There are four entrances to the temple. In this temple the entrances can be fastened. But in temples generally the main entrance will be built only near the shrine and in other sides closed entrances are built with a view to point out the need of the entrance. Hence the main entrance gets the name "Sannathi" while the closed entrances "Ganathuvaram" Books on sculptures make the point clear. In Tamil Nadu, there are temples with an open entrance on one side and windows on three sides like the temples at Tharasuram and Kanchipuram.

This building construction pattern is based upon the Pallava style. The roof erected over the shrine is known as "Kooda Vimanam". The sight of it reminds one of the Draupathi Car which is one among the five cars at five single stone temples at Mamallapuram. Though this roof only resembles a hut, it is an artistic roof visualized by an artist. Sculptural authors are of opinion that such a

square-roof known as "Sathura Vimanam" will represent meekness. The deity inside is of meek nature, hence this roof best suits. This model used for Poompuhar, Patthni - K - Kottam, has gained historical importance because nowhere else in Tamilnadu except Mamallapuram such a model is used.

The sculptor's view, that the five cars of Mamallpuram and other temples there are the models of the Sangam period, is reflected in this temple.

The revival of the ancient glory of this historical city is being realised by every one in Tamil Nadu. And recently efforts are taken with redoubled vigour and enthusiasm. This, Pathini-K-Kottam, we feel will play a prominent role in making this city an attractive tourist Centre in the South. We hope, with the blessings of the Almighty, our aspiration will become an achievement!

-0-

# பத்தினித்தெய்வம்

"போதிலார் திருவினுள் புகழுடை வடிவென்றும்
தீதிலா வடமீனின் திறமிவள் திறமென்றும்
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர்மன்னுங் கண்ணகியென் பாள்மன்றோ"

– சிலப் : மங்கல

# பத்தினித்தெய்வம்

( பேராசிரியர், தி. வ. காந்திமதிநாதன், மாயூரம். )



**என்ன செய்தி ?**

**நல்ல செய்தி தான் !**

பூம்புகார் நகரமெங்கும் மகிழ்ச்சி பொங்கிற்று. அலைபாடும் கரையில் அமைந்த அந்தக் காவிரிப் பூம்பட்டினத்தின் அகன்ற தெருக்களின் வழியே பல நூறு ஆண்டுகளுக்கு முன்னே யானை மேலிருந்த வண்ணம் நகையணிந்த நங்கையர் சிலர் மங்கலச்செய்தி ஒன்றைத் தெரிவித்து வந்தார்கள். என்ன செய்தி? நல்ல செய்தி தான் !

மாநாய்கன் என்ற வணிகப் பெருமகனின் செல்வத் திருமகள் கண்ணகிக்கும் மாசாத்துவான் என்ற வணிகச் செம்மலின் செல்வத் திருமகன் கோவலனுக்கும் திருமணம் நடைபெறும் என்ற அந்தச் செய்தியறிந்து ஆடவர், பெண்டிர் அனைவரும் திரண்டனர். காண்பார் கண்கள் தவம் செய்த கண்கள் என்று சொல்லுமளவிற்குத் திருமணக் காட்சி விளங்கிற்று. "காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல் தீது அறுக" என்று மக்கள் எல்லாம் மணமக்களை வாழ்த்தினர். எத்தனை எத்தனை இன்பங்கள் உண்டோ அத்தனையும் துய்த்த வண்ணம் கண்ணகி – கோவலன் வாழ்க்கையில் சில ஆண்டுகள் கழிந்தன.

**கலை மயக்கம்**

ஆடற் கலையில் வல்ல அழகு மங்கை மாதவியின் மீது காதல் கொண்டு ஆயிரத்து எண் கழஞ்சு பொன் விலை கொடுத்து, மன்னன் அவளுக்கு அளித்த மாலையைத் தான் வாங்கி அவள்

வீட்டுக்குச் சென்றான் கோவலன். வீடு சென்றதும் அவளை விட்டுப்பிரிய முடியாத விருப்பம் கொண்டான். தன் மனையகம் மறந்தான். மனையகத்துக் கண்ணகி தன்னையும் மறந்தான்.

### கவலையின் உருவம்

தன்னந்தனியாகத் தன் வீட்டில் இருக்கும் கண்ணகியின் நிலை என்ன? அதோ, அங்கே அமர்ந்திருக்கிற அவள் எப்படிப்பட்ட துயரில் மூழ்கியுள்ளாள்! அவள் நிலையை எப்படி வருணிக்க இயலும்?

அழகிய சிவந்த மென்கால்களில் சிலம்புகள் இல்லை. மெல்லிய துகில்மீது மேகலை இல்லை. கொங்கை முற்றத்துக் குங்குமம் இல்லை. முழுமதி போலும் முகத்தில் முத்துப்போன்ற வியர்வை இல்லை. கயல்போலும் கண்ணில் கருமையூட்டும் மை இல்லை. இருண்ட கூந்தலில் எண்ணெயும் இல்லை. நெற்றியிலே திலகம் இல்லை. கோவலன் அங்கே இல்லை. ஆதலால் குறுநகை இல்லை. ஒடுங்கி வருந்தி நெடுமூச்சும் பெருமூச்சுமாக இருக்கும் அவள் கண்களில் இருந்து முத்து முத்தாகக் கண்ணீர்த் திவலைகள் உதிர்ந்தன.

## கண்ணகியின் சிறப்புத் தன்மைகள்

### பேரிடர் தன்னிலும் பெருமிதம்

கணவன் தன்னைப் பிரிந்து சென்றதால் வருந்தி வாடுவதைக் கண்டு தேவந்தி என்னும் அவளுடைய பார்ப்பனத் தோழி கண்ணகியின் பொருட்டுத் தான் இறை வழிபாடு செய்து வந்து ஆறுதலாகச் சில சொன்னாள்: "கடலொடு காவிரி கலக்கும் இடத்தில், 'சோம குண்டம்' 'சூரிய குண்டம்' இவற்றில் மூழ்கிக் காமவேள் கோட்டத்தைத் தொழுதால் கவலைபோகும், கணவன் வருவான்" என்றாள். ஆனால் கண்ணகியோ காமன் கணைக்கு அஞ்சி அவன் காலில் விழும் கோழை இல்லை. வெல்லும் திறம் படைத்து வெற்றிச் சிறப்பே கொள்ள வந்த கண்ணகி கணவன் இருக்கக் கடவுளைத் தொழுதல் பெருமைதரும் செயலன்று ("பீடன்று") என்று கூறித் தன் பெருமித உணர்வை வெளிப்

படுத்தினள். உலகப் பெண்டிர் போலன்றி உன்னத நோக்கால் உயர்ந்தவள் கண்ணகி என்ற எண்ணம் நம் உள்ளத்தில் முதன் முதலாக இங்கேதான் கருக்கொள்கிறது. காப்பியப் போக்கிலே அது மேலும் மேலும் வளர்ந்து வலுப்பெற்று நிறைவு பெறுவதைப் பார்க்கலாம்.

### தனக்கென வாழாத் தன்மை

தன்னைப் பிரிந்த கணவன் கோவலன் பால் கண்ணகி தன் வருத்தத்தையும் விருப்பத்தையும் யார் மூலமாகவேனும் தெரிவித்திருக்கலாம். அப்படிச் செய்தி சொல்லியனுப்பியதைச் சில இலக்கியங்கள் சித்திரிக்காமல் இல்லை. கண்ணகியோ அப்படிச் செய்யவில்லை. கணவனுடைய இன்பமே பெரிதென எண்ணுவதில் எள்ளளவும் குறைவில்லாமல் வாழ்ந்தவள். எனவே கோவலன் பாதையில் குறுக்கிட எண்ணவில்லை. கண்ணகி என்ன, சாதாரணப் பெண்ணா?

### துயரம் ஏன்?

காமன் மலரம்புக்கும் கலங்கவில்லை. கோவலன் வாழ்விலும் குறுக்கிட விரும்பவில்லை. பின்னர் ஏன் கண்ணீர்வடிக்கவேண்டும்? தன்னை நினைத்து அவள் கண்ணீர் வடிக்கவில்லை என்பது அவள் வாய்மொழியாலேயே தெரியவருகிறது. கோவலன் குறை யுடையவனாக எண்ணப்படுகிறானே, அப்படி ஒரு சூழ்நிலை குடும்பத்தில் ஏற்பட்டுவிட்டதே என்ற கவலையினாலேதான் கண்ணீர் பொங்கிற்று. கணவனும் மனைவியுமாக இருந்து நடத்தும் குடும்பத்தில் நடைபெற வேண்டிய நிகழ்ச்சிகள் கண்ணகி – கோவலன் வீட்டில் நடைபெறவில்லை. அறவோர்க்களித்தல், அந்தணர் ஓம்பல், துறவோர்க் கெதிர்தல், விருந்தெதிர் கோடல் போன்ற எவையும் அவர்கள் இல்லத்தில் நிகழவில்லை. மனையறம் படுத்திய பெற்றோர் இந்த நிலை கண்டு வருந்தினர். அவர்கள் போற்றாத ஒழுக்கத்தில் கோவலன் ஈடுபடும்படி ஆயிற்றே என்று தான் அவள் வருந்தினள். இந்த உண்மை கண்ணகியும்கோவலனும் மாதரி வீட்டில் மதுரையில் துயரங்களைப் பகிர்ந்து பரிமாறிக் கொள்ளும்போது புலனாகிறது. இத்தகைய உயர்ந்த உள்ளப் பண்பை சாதாரண சராசரிப் பெண்ணிடத்தில் காண முடியாது.

## திரும்பி வந்து கோவலனைக் கண்டபோது

பிரிந்து சென்ற கணவன், மனைவியைத் தேடித் திரும்பி வந்து வாயிற் படியேறும்போது உரிமையோடு ஊடல் கொண்டு கதவடைப்பின் மூலம் எதிர்ப்பைத் தெரிவித்துக் கொள்வது அனுமதிக்கப்பட்ட உரிமை என்பது உலகியல்; இலக்கிய மரபுகளால் உறுதிப்படுத்தப்படுகிறது. வாயில் மறுத்தல் என்ற அந்த உரிமையைப் பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்பு நிரம்ப உள்ளது. அப்போது அவள் எப்படி நடந்து கொண்டாள்?

பூம்புகாரில் இந்திரவிழா என்றால் வானுலகத் தேவரும் குடும்பத்தோடு வந்து காண்பார்கள். அந்தத் திருவிழா தொடங்கியது. கடல் போலத் திரண்ட மக்கள் கடற்கரையில் கூடினர். கோவலனும் மாதவியும் சென்றனர். கடலோரத்தில் மாதவி பாடிய கானல் வரிப்பாடல் கோவலனை அவளிடம் இருந்து பிரித்தது. "மாயப் பொய்பல கட்டும் மாயத்தாள்" என்று பழித்து அவளைத் துறந்துவிட்டுக் கோவலன் கண்ணகியை எண்ணி நடந்தான்.

வீடு தேடி வந்த கோவலனைக் கண்ட கண்ணகி முகம் திரிந்து நோக்கவில்லை. நலங்கேழ் முறுவல் நகை முகம் காட்டி வரவேற்றாள். குலம் தரு வான் பொருள் குன்றம் தொலைந்த இலம்பாடு (வறுமை) நாணுத் தரும் என்று சொல்லி வருந்தினாள். அறம் சாரா நல்குரவு ஒருவனை அடைந்தால் அவன், ஈன்ற தாயாலும் ஏதிலன் போலப் பார்க்கப் படுவான் என்று பேசுவர். கண்ணகியோ சாலப் பரிந்து அவன் காரியம் யாவினும் கைகொடுத்து உதவும் பண்புடையாள் ஆகையால் "சிலம்புகள் இருக்கின்றன. கொள்ளும்" என்றாள். இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு? சிலம்பை முதலாகக் கொண்டு, சென்ற பொருள் யாவும் மீட்கச் செல்வத் திருநகராம் மதுரைக்குச் செல்வோம், புறப்படு என்றான் கோவலன். எதிர் எதுவும் கூறாது பூங்கோதை பின் தொடர்ந்தாள். பெற்ற தாயிடம் கேட்கவில்லை, பேணிய தாயிடம் பேசவில்லை, மாமனிடம் சொல்லவில்லை, மாமியிடம் கூறவில்லை, ஆயத்தார் அறியவில்லை. கற்புக் கடம் பூண்டு காதலன் பின் சென்றாள். இப்படி வாழ்க்கைத் துணை

யிருந்தால் ஏறுபோல் பீடு நடை போடலாமே! ஆம். அந்தப் பெருமிதத்தோடுதான் கோவலன் வாரணம் கூவும் முன்னர் வைகறைப் போதில் காற் சிலம்பைக் கையில் ஏந்திப் பெரு நம்பிக்கையுடன், கண்ணகி உடன்வரப் புகார் நகரினின்றும் மதுரை நோக்கி நடந்தான்.

பொருளீட்டும் எண்ணத்துடன் வேற்றூர் செல்லும் ஒருவன் தன் மனைவியை அழைத்துப்போகவேண்டுவதில்லை. இலக்கிய மரபும் உலகியலும் அப்படித்தான். உடன்வா, என்ற அவன் சொல்லும், சொல்லும்முன்னே எழுந்த அவள் செயலும் நினைத்தொறும் நினைத்தொறும் மகிழ்வூட்டுகின்றன. இந்த நிகழ்ச்சியால் கண்ணகியின் பெருமை மேலும் உயர்ந்துவிடுகிறது.

### தெய்வத்தன்மைகள்

பொதுவாக மானிடப் பெண்களிடம் காணக்கிடைக்காத தனிச் சிறப்புடைய தன்மைகளைக் கண்ணகியிடம் காட்டிய ஆசிரியர் இளங்கோவடிகள் அடுத்த நிலையாகத் தெய்வத் தன்மைகள் பல அவளிடம் குடிகொண்டிருப்பதை விவரிக்கத் தொடங்குகிறார்.

மடந்தை கண்ணகியின் வண்ணச் சீறடிகளை மண்மகள் அறிந்ததில்லை. அத்தகைய மெல்லியலை அழைத்துக்கொண்டு புறப்பட்ட கோவலனின் கலக்கத்தைப் போக்கும்வகையில் அவர்களுக்கு வழித்துணையாகக் கவுந்தியடிகள் என்ற சமணத் துறவி அறிமுகமாகிறாள். மூவருமாகச் செல்லுகின்றவேளையில் எதிரே ஆணும் பெண்ணுமாக இருவர் வந்தனர். அவர்கள் பெரியோர் கூறும் நல்லவழியைவிட்டு விலகிய தீயவர்கள். அவர்களுடைய கெட்டகாலம் என்றுதான் சொல்லவேண்டும்; காமனும் இரதியும்போன்ற கோவலனும், கண்ணகியும் அவர்கள் கண்ணில் பட்டுவிட்டனர். அழகைக் கண்டு மயங்கி வியந்து அவர்கள் யார் என்று உடன் வரும் மாதவத்தாட்டியைக் கேட்டனர். கவுந்தி ஐயை அவர்களைக்கண்டு அருவருப்புக் கொண்டாள். அவர்களோடு பேச்சை வளர்க்க விரும்பாமல் ஒன்றிரண்டு சொற்களோடு கத்தரித்துவிடுவதுபோன்ற முறையில் “அவர்கள் என்னுடைய மக்கள், மானிட யாக்கை

கொண்டவர்கள்தான் (வானவர் அல்லர்). நீங்கள் அவர்கள் பக்கம் போகாதீர்கள், அவர்கள் பெரிதும் வருந்தி மனம் நொந்து வந்திருக்கிறார்கள்" என்று பதிலுரைத்தார்.

"என்னையோ அன்னை சொல்லியதே" என்ற சொற்கள் (திருக்கோவையார்) படிந்திருக்கும் நெஞ்சங்கள் திடுக்கிடும் படியாக இவர்கள் என்னையோ அன்னை சொல்லியதே என்று நகைத்தார்கள் "அண்ணனும் தங்கையும் (உம்முடைய மக்கள் என்று சொல்வதால்) கணவனும் மனைவியுமாக வாழ்க்கை நடத்துவதுண்டோ? கற்றறிந்தவராக இருக்கின்றீரே!" என்று தகவற்ற பேச்சை நீட்டினார்கள்.

குணமென்னும் குன்றேறி நின்ற கவுந்தியடிகளுக்குக் கணநேரம் கோபம் தோன்றிற்று. கணநேரம்தான் என்றாலும் அதினின்றும் ஒருவர் தன்னைக் காத்துக்கொள்வது அரிது.

குறும்பாகப் பேசிய இருவரையும் கவுந்தியடிகள் முள்ளுடைய காட்டில் முதிய நரிகள் ஆகும்படி சபித்துவிட்டார். அவர்கள் நின்ற இடத்தில் அவர்கள் இல்லை. நரிகள் ஊளையிடும் ஒலி கேட்டது. இதைக்கண்டு கண்ணகியும் கோவலனும் மனம் நடுங்கினர். "ஏதோ தெரியாமல் செய்துவிட்டார்கள், அதை அவர்கள் அறியாமை என்று (பொறுத்துக்) கொள்ளவேண்டும். உங்கள் முன்னால் தவறுசெய்த அவர்களுக்குத் தாங்கள்தான் சாப விடை தந்தருளவேண்டும்" என்று கேட்டுக்கொண்டனர். மாதவத்தாட்டியும் அவர்கள் பரிந்துரைக்குச் செவி சாய்த்து,

"அறியா மையின் இன்று இழிபிறப்பு உற்றோர்
உறையூர் நொச்சி ஒருபுடை ஒதுங்கிப்
பன்னிரு மதியம் படர்நோய் உழந்த பின்
முன்னை உருவம் பெறுக ஈங்கு இவர்"

எனச் சாப விடை கொடுத்தார்.

தவறுவது மனித இயல்பு: மன்னிப்பது தெய்வத் தன்மை என்பார்கள். அந்தவகையில் இங்கே மன்னிக்கும் மனப்பான்மையுடன் நடந்துகொள்ளும் கண்ணகியின் பண்பை உணர்கிறோம். தம்மை இகழ்ந்தவரைத் தாம் பொறுப்பதோடன்றி

அவர்பொருட்டுப் பரிவுகொள்வதும் சான்ருேர்கடன் என்ற இலக்கணத்திற்கு இலக்கியமாக இங்கே கண்ணகி விளங்குவதைப் பார்க்கிருேம். ஆசிரியர் இங்கு கோபம் முதலியவற்றை வென்ற புண்ணிய முதல்வியைவிட உயர்ந்த பண்பட்ட பாத்திரமாகக் கண்ணகியைக் காட்டிவிடுகிருரோ என்று எண்ணத் தோன்றுகிறது.

இனி அடுத்தபடியாகக் காட்டவேண்டியதென்ன ? மக்களை மருட்டுகின்ற சிறு தெய்வங்கள்கூடக் கண்ணகியைக் கண்டால் அஞ்சும். அத்தகைய தெய்வத்தன்மை கண்ணகியிடம் உண்டு. இதைப் புலப்படுத்தும் நிகழ்ச்சி ஒன்றை இளங்கோவடிகள் காட்டுகின்ருர்.

மதுரை நோக்கிச் சொல்கின்றபோது ஒருநாள் கருந்தடங் கண்ணி கண்ணகியையும் கவுந்தியடிகளையும் தனியே ஓரிடத்து இருக்கச்செய்துவிட்டுக் கோவலன் தான்மட்டும் ஒரு பொய்கைக் கரைக்குச் சென்ருன். அப்போது மாதவியின் தோழி வசந்தமாலை வடிவத்தில் காடுறை தெய்வம் ஒன்று வந்து கோவலனை மயக்க எண்ணியது. கோவலன் கொற்றவை மந்திரம் அறிந்தவன் ஆதலின் அதன் துணைகொண்டு வனசாரணியாகிய அத் தெய்வத்தின் வஞ்சத்தை அறிந்துகொண்டான். மந்திரம் உணர்ந்த தெய்வம் மருண்டு நடுங்கி "மயக்கம் செய்துவிட்டேன் என்னுடைய இந்தச் செயலைக் கண்ணகியிடம் கூருதே" என்று சொல்லிச் சென்றது.

இப்போது சிறு தெய்வங்கள்கூடக் கண்ணகியை எண்ணி அஞ்சுகின்றன என்ருல் கற்புக் கடம்பூண்ட அவளிடம் எப்பேற்பட்ட தெய்வத் தன்மைகள் இருக்கின்றன என்பதை நாமெல்லாம் நன்குணருமாறு செய்துவிடுகிருர் ஆசிரியர்.

### கண்ணகி தெய்வப் பிறவியே

தொடர்ந்து வரும் நிகழ்ச்சிகளின்மூலம் கண்ணகி தெய்வப் பிறவியே என்ற கருத்து உறுதிப்படுவதைக் காணலாம்.

வேடர்கள் வாழும் பகுதியைக் கண்ணகி, கோவலன், கவுந்தியடிகள் ஆகியோர் கடந்து சென்றபோது வியத்தகு நிகழ்ச்சி ஒன்று ஏற்பட்டது. வேடர்கள் தங்கள் தெய்வமாகிய கொற்றவைக்கு விழாக் கொண்டாடி வழிபாடு செய்யத் தொடங்கினர். வழிபடும் உரிமைகொண்ட சாலினி என்பாளை ஒப்பனைசெய்து கொற்றவையின் திரு முன்னர் நிறுத்தினர். அவள் தன்மீது தெய்வமுற்றதால் ஆவேசம்கொண்டு அடி பெயர்த்து ஆடத் தொடங்கினாள். அந்த நிலை எய்தியது முதல் தெய்வம் நீங்கி விடுபடும்வரையில் அவள் சொல்வன யாவும் தெய்வ வாக்காகவே கருதப்படும். தெய்வ நிலை எய்திய அவளைச் சுற்றிக் கானவர் பலரும் பயபக்தியோடு பணிந்து நின்றனர். அந்தக்கட்டத்தில் கவுந்தியும், கோவலனும், அருகே கண்ணகியும் நின்றனர்.

தெய்வமேறிய பெண், கண்ணகியைப் பார்த்தாள். பார்த்த மாத்திரத்திலேயே அங்குள்ள அனைவர் பார்வையையும் அவள் பக்கம் திருப்பும் வகையில் அவளைத் த்ன் விரலால் சுட்டிக் காட்டினாள். பின்னர் அவள் கண்ணகி அருகே நின்று பேசத் தொடங்கினாள். "இவள் கொங்குநாட்டுச் செல்வியாவாள்; குடமலைநாட்டின் நன்மகளாவாள்; தென்தமிழ் நாட்டின் பாவை ஆவாள், இவள் ஒப்பற்ற மாமணியாக உலகிற்கு வந்த திருமாமணி" இந்த ஆருடப் பாராட்டுரைகள் அவள் வாய் வழியே உதிர்ந்தன. சிலப்பதிகார 'உரை பெறு கட்டுரை' இதை உறுதிப்படுத்தும் சான்றுரையாகும்.

தன்னை இவ்வளவு உயர்வாகப் பேசியதைக் கேட்ட கண்ணகி தம் புகழ் கேட்ட சான்றோர்போலத் தலை கவிழ்ந்து அடக்கத்துடன் "மயக்கத்தால் இந்தத் தெய்வமேறிய பெண் இவ்வாறு பேசுகிறாள்" என்று கூறித் தன் கணவன் கோவலன் முதுகுப்புறத்தே ஒதுங்கி நின்று புதியதொரு முறுவல் பூத்தாள். எப்போதும் சிரித்த முகத்துடன் விளங்கும் இயல்புடையவள்தான். தனிமையில் தான் வருந்தியகாலத்து இரு முது குரவரும் தன்னைக் காணவந்தபோது தன் மனத்துயரை வெளிக்காட்டாமல் முறுவல் பூத்த இன்முகத்துடன் வரவேற்றனள். மாதவியிடமிருந்து வந்த கோவலனைக் கண்டபோதும் நலங்கேழ் முறுவல் நகைமுகம் காட்டினாள். புகார் நகரினின்றும் புறப்பட்டுச் சிறிதுதூரம்

சென்றதுமே மதுரை மூதூர் யாது? என்ற கேள்வியைக் கோவலனிடம் முள்ளெயிறிலங்கச் சிரித்துக்கொண்டேதான் கேட்டாள். ஆனல் அப்போதெல்லாம் காணப்படாதவகையில் இப்போது புதுமையான புன்னகையைக் கண்ணகி தோற்றுவித்தாள் என்று குறிப்பிடுவதே ஆசிரியரின் நோக்கம். அந்தப் புதுமைக்குக் காரணம் என்ன? முன்னரே கண்ணகிக்குத் தன்னிடம் ஏதோ ஒரு பெரிய சக்தியிருப்பதாகக் கனவிலே புலப்பட்டது. காவலனோடு கட்டுரைத்துக் கோவலனோடு உற்ற நற்றிறம் கேட்கின் நகையாகும் என்று தன் தோழி தேவந்தியிடம் முன்னரே கூறியிருக்கிருள். இப்போது இந்தத் தெய்வப் பெண்ணின் வாக்கின்மூலம் நனவிலும் தன் ஆற்றல் குறிக்கப்பட்டதைப் பொருத்தி பார்த்துப் புதியதொரு முறுவல் பூத்திருக்கவேண்டும்.

இதுவரையில் தன் ஞானத்தாலும் வழிநடையில் ஏற்பட்ட பழக்கத்தாலும் கண்ணகியைப் பற்றி அறிந்து வைத்திருந்த கவுந்தியடிகளுக்கு இப்போது வேடர் சேரியில் கேட்ட தெய்வ வாக்கு அந்தப் பத்தினியைப்பற்றிய தெளிவான கருத்தைத் தந்திருக்க வேண்டும். அதனல் அவர் கண்ணகியின் தெய்வத் தன்மையை ஐயம் திரிபற உணர்ந்தார். மூதறிவாட்டியான வேடுவர் குமரியேனும் பேதுறவு மொழிந்தனள் என்று கொண்டாலும் கொள்ளலாம். ஆனல் மாதவத்தாட்டியான கவுந்தியடிகள் தெள்ளத் தெளிந்த சொற்களில் திருத்தமாகவும், உறுதியாகவும் அந்தக் கருத்தைத் தெரிவிப்பதைப் பார்க்கிறோம்.

இயக்கி என்னும் தெய்வத்தை வழிபட்டுத் திரும்புகின்ற மாதரி என்ற இடைக்குல மடந்தையிடம் கவுந்தி ஐயை கண்ணகியை அறிமுகப்படுத்துகிருர். அப்போது "இவளைப் போலப் பொற்புடைத் தெய்வம் யான் கண்டதே இல்லை என்று போற்றிப் புகழ்ந்து பேசுகிருர் :

"தன்துயர் காணுத் தகைசால் பூங்கொடி
இன்துணை மகளிர்க்கு இன்றி யமையாக்
கற்புக்கடம் பூண்ட இத்தெய்வம் அல்லது
பொற்புடைத் தெய்வம் யாம்கண் டிலமால்."

— அடைக்கலக் காதை. (141-144)

### துயரம் களைந்த சொற்கள்

மதுரையில் மாதரி வீட்டில் கண்ணகி திருமுகம் வியர்க்கச் சமைத்த அறுசுவை உணவைக் கோவலன் உண்டு மகிழ்ந்த பின்னர் கணவனும் மனைவியும் காதலுற்று அளவளாவினர். பன்னிரண்டு பதினாறு வயதுப் பருவத்திலேயே பாம்புகள் ஒன்று பட்டுத் தழுவினாற்போல நீங்காது இணைந்து நிலையாமை உணர்ந்தவர்போல் தொலையாத இன்பமெல்லாம் துய்த்த மணமக்கள் அல்லவா அவர்கள்! நெடுநாட்களுக்குப் பின் தனிமையில் சந்திக்கிறார்கள். அதனால் அப்போதும் கோவலன் அவளை அருகழைத்து அரவுபோல் அணைத்துக் கொள்கிறான்.— அரவணைத்துக்கொள்கிறான். தன் தலையிலே சூடிய மாலை அவள் கூந்தலிலே படியும்படியாகத் தழுவிக் கொண்டான் என்று தான் ஆசிரியர் குறிப்பிடுவார். (ஊர் சூழ்வரி 35 – 36). அந்தச் சூழ்நிலையில் கோவலன் கண்ணகியிடம் சொல்லவேண்டும் என்று தன் உள்ளத்தில் நீண்ட நெடுநாட்களாகத் தேக்கி வைத்திருந்த செய்திகளை, சொன்னால்தான் ஆறுதல் கிடைக்கும் என்ற ஏக்கத்தில் நெஞ்சம் திறந்து வெளியிடுகிறான். தன் வாழ்க்கையில் செய்துவிட்ட இரண்டு பெரிய தவறுகளை எண்ணி வருந்தியவன் அப்போது அவளிடம் சொல்லி வருந்துகிறான். பெற்றோர் இட்ட கட்டளையின்படி நடவாமை, இளமையிலேயே பேரறிவு கொண்ட கண்ணகி துன்பம் அடையக் காரணமாக இருந்தமை ஆகிய இவ்விரண்டுமே அவை.

"பெற்றோர்கள் எனக்குத் திருமணம் செய்விக்க விருப்பம் கொண்டு சிறப்பாகச் செய்து முடித்தனர். அவர்கள் ஏவிய வண்ணம் இல்லறம் நடத்துமாறு மனையம்படுத்தினர். நானோ மனையகம் மறந்தேன். மனைவியை மறந்தேன். பெற்றோர்க்கும், பேணிய கற்புடைய மனைவிக்கும் பேரிடர் செய்தவனாகி விட்டேன்," என்ற கருத்துப்படப் புலம்பினான்.

> "இருமுது குரவர் ஏவலும் பிழைத்தேன்
> சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையும் செய்தேன்."
>
> — கொலைகளக் காதை. (68 – 69)

கோவலன் தன் குற்றங்களைச் சொல்லி வருந்தும்போது கண்ணகி அவனுக்கு ஆறுதல் சொல்லாமல் "போற்ரு ஒழுக்கம் புரிந்தீர்" என்று அவனை ஏளனமாகப் பேசியதாகவும், தன்னைப் பற்றி "மாற்ரு உள்ள வாழ்க்கையேன்" என்று தருக்கிப் பேசியதாகவும் கூறுவதுண்டு. சிறிது சிந்தித்துப் பார்த்தால் அந்த நேரத்தில், அந்த உருக்கமான சூழ்நிலையில் அவள் அந்த எண்ணத்தில் பேசியிருக்க முடியாது என்பது போதரும்.

"மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக் கண்ணகியா இப்படிப் பேசுவாள்? "கடுங்கதிர் வெம்மையின் காதலன் தனக்கு நடுங்கு துயர் எய்தி நாப்புலர வாடித் தன் துயர் காணுத்தகைசால் பூங்கொடியான கண்ணகியா, இப்படிப் பேசுவாள்? "பேதுறவு மொழிந்தனள் மூதறிவாட்டி" என்று அடக்கத்துடன் பேசிய கண்ணகியா இப்படிப் பேசுவாள்?

இரு முதுகுரவர் ஏவல் பிழைத்ததற்காகவும் மனைவிக்குச் சிறுமை செய்ததற்காகவும் வருந்தி "மதுரைக்கு வா என்று உன்னை அழைத்ததும் உடனே வந்து விட்டாயே, என்ன காரியம் செய்து விட்டாய்! என்று மனம் கலங்கிய அவனிடம் கண்ணகி சொன்ன பதிலை அமைதியாக நினைத்துப் பார்க்கவேண்டும்.

"நாம் இருவரும் செம்மையான இல்லறம் நடத்தவேண்டும் என்று தானே இரு முதுகுரவரும் ஏவினர், இப்போது நாம் இணைந்துவிட்டோம், அதனல் அது பிழைபடவில்லையே, எனக்குச் சிறுமை செய்து விட்டதாக வருந்தினீர்கள், என் தனிமை கண்டு தானே பெற்ரோர் வருந்தினர், இப்போது தங்களுடன் வந்து விட்டதால் இருவரும் இணைந்து விட்டோம் என்று அவர்கள் எல்லையற்ற மகிழ்ச்சி அடைவார்கள். அவர்கள் என்னை வந்து கண்டபோது புன்முறுவல் காட்டி வருத்தத்தை மறைத்தேன். ஆனல் அவர்கள் என் உள்ள நிலையை உள்ளவாறே புரிந்து கொண்டு வருந்தினர்கள். அந்த நிலையில் நான் என்ன செய்ய முடியும்? அவர்கள் போற்ருத வாழ்க்கையை நீர் மேற் கொண்டிருந்ததால் நான் ஒன்றும் செய்ய முடியாதவளாக இருந்தேன்."

"............. அவர் உள்ளகம் வருந்தப்
போற்ரு ஒழுக்கம் புரிந்தீர் யாவதும்
ஆற்ரு உள்ள வாழ்க்கையேன்"

– கொலைக்களக்காதை (80 – 82)

திசையறியாது திகைத்த எனக்குத் தாங்கள் வந்து சொன்ன "எழுக" என்ற சொல் கல்லொன்றில் இரண்டாகப் பயன்தரும் மாமருந்தாகப்பட்டது. அதனுல் உடனே புறப்பட்டு விட்டேன்," என்ற பொருள்படத்தான் அவள் பேசியிருக்க வேண்டும். தாங்கள் தந்த மருந்தைத் தக்க சமயத்தில் நான் பயன்படுத்திக் கொண்டேன். அவ்வளவுதான் என்செயல் என்ற அடக்க உணர்வோடு பேசியதாக இருக்க வேண்டுமேயன்றித் தன்னை வியந்தும் தன் காதலனை இகழ்ந்தும் பேசியதாகக் கொள்ளுதல் பொருத்தமாகப் படவில்லை.

கண்ணகி இப்படிப் பேசியதாகக் காட்ட வேண்டும் என்பது இளங்கோவடிகள் கருத்தாக இருக்குமானுல் தொடர்ந்து கோவலன் அவளைப் பாராட்டிப் பேசியதாக அமைத்திருக்க மாட்டார். ஆனுல் கண்ணகியின் அந்தப் பதில் – ஆறுதல் உரை கோவலனுக்குத் துயர் நீக்கிய உரையாகவே பட்டது. அதனுல் அவனே பாராட்டுகிருன்.

"என்னெடு போந்து ஈங்கு என்துயர் களைந்த
பொன்னே; கொடியே; புனைபூங்கோதாய்;.........

என்றெல்லாம் அடுக்குகிருன்.

மதுரைக்கு உடன் வந்த ஒன்றைக் குறித்தனவாக இச் சொற்களை எண்ணுதல் கூடாது. என்னெடு வந்தாய், இப்போது இங்கே (ஈங்கு) என் துயரையும் போக்கி விட்டாய், என்றே கொள்ள வேண்டும். புகார் நகரத்தில் மனையறம் படுத்தபோது நிரை நிலை மாடத்து அரமியம் ஏறித் தீராக் காதலின் திருமுகம் நோக்கிக் கோவலன் கூறிய குறியாக் கட்டுரை போல் கொள்ளலாகாது.

"நெறியின் நீங்கியோர் நீர்மையேன் ஆகி
நறுமலர் மேனி நடுங்குதுயர் எய்த
அறியாத் தேயத்து ஆர் இடை உழந்து
சிறுமை உற்றேன்"...............

(ஊர் காண் : (17 – 20 )

என்று கோவலன் காவுந்தி ஐயையிடம் வருத்தமுற்றுக் கலங்கியபோது அந்த மாதவத்தாட்டி சொல்லிய ஆறுதல் உரையைவிட இப்போது இந்தக் குலப்பிறப்பாட்டி கூறிய ஆறுதல் உரை சிறந்ததாகவே படுகிறது. இவ்வளவு நயமாகப் பேசவும் கூடியவளா கண்ணகி, என்ற வியப்பு நமக்கு ஏற்படலாம். உள்ளத்தில் ஒளியுண்டாயின் வாக்கினில் ஒளியுண்டாகும் என்பது உண்மையன்றோ!

## தெய்விக ஆற்றல்கள்

சிலம்பை விலை பேசிவரச் சென்ற கோவலனைக் குறுமகன் பொற்கொல்லன் ஒருவன் ஏமாற்றிப் பொல்லாத தன் வலையில் சிக்க வைத்து, அரசனிடம் அரண்மனைச் சிலம்பினைத் திருடிய அந்தக் கள்வன் கோவலன்தான் என்று பொருந்தும் வகையில் பொய்பல நெய்து காட்டி அவனுக்குக் கொலைத் தண்டனையும் கொடுக்குமாறு செய்து விட்டான்.

### கோவலன் வெட்டுண்டான்

கண்ணகி இருந்த ஆயர்பாடியில் தீய உற்பாதங்கள் தென்பட்டன. அறமகள் கண்ணகியும், ஆய முதுமகள் மாதரியும், அவள் மகள் ஐயையும், மற்றையோரும் மனம் கலங்கிப் பதறினர். எப்போது மனம் கலங்குகிறதோ, அப்போது பரிகாரம் வேண்டி இறைவழிபாடு செய்தல் இயல்புதானே? முதுமகள் சொற்படி ஆயர் சேரியில் அனைவரும் திருமாலை நினைந்து தெய்வக் குரவை ஆடினர். செய்வதறியாத கண்ணகியோ அவர்களோடு ஆடவில்லை. பாடவில்லை. அவர்களைப் பார்த்துக் கொண்டே இருந்தாள்.

"மாதர்க்கு அணியாகிய கண்ணகியும் தான்காண
................குரவை ஆடுதும் யாம்..............

— ஆய்ச்சியர் குரவை.

கண்ணகி, தெய்வத்தை வழிபட்டதாக எங்குமே சொல்லப் படாமை நினைத்தற்குரியது.

குரவை முடிவில் ஊரரவம் கேட்டு ஓடி வந்த ஒரு பெண் தயங்கி நின்ருள். அவள், ஊரிலே பேசிக் கொள்ளும் செய்தியைத் தான் சொல்ல வந்தாள். ஆனுல் கண்ணகி அப்போது எதிர்ப் பட்டதால் சொல்லாமல் நின்ருள். ஓடி வந்தவள் தன்னைப் பார்த்ததும் ஒன்றும் பேசாமல் நிற்பதைக் கண்ட கண்ணகி பதை பதைத்து "தோழி! என்ன செய்தி என்று சொல், என் உள்ளம் ஊதுலை தோற்க உயிர்க்கின்றது. ஊரார் சொன்னது என்ன? நல்ல பட்டப் பகலிலே உச்சி வேளையிலும்கூட என் உடம்பு நடுங்குகிறது, என் காதலன் இன்னும் வரவில்லையே, ஏதோ வஞ்சனை நடந்திருக்கிறது, என்னவென்று சொல் தோழி!" என்று துடிதுடித்தாள். அதற்கு மேலும் அடக்கிக்கொள்ள முடியாமல் தயங்கிய அந்தப்பெண் தட்டுத் தடுமாறிச் சொல்லி விட்டாள்.

"அரண்மனைச் சிலம்பைத் திருடிய கள்வன் என்று கோவலனைக் கொலை செய்து விட்டார்களாம்."

செய்தி கேட்டதும், கண்ணகி பொங்கி எழுந்தாள். தண்மதி மேகத்தோடு தரையிலே வீழ்ந்ததுபோல் வீழ்ந்தாள். கோபத்தால் சிவந்த கண் அழுகையால் சிவக்கும்படி கதறினுள். என் காதலனே! எங்கே இருக்கின்ருய் நீ? என்று ஏங்கினுள், இனைந்தாள், மயங்கினுள்.

பையத் தெளிந்தது மயக்கம். மயக்கம் தெளிந்ததும் புதிய பிறவியோ என்னும்படி நிமிர்ந்தாள். புனலொடுங்கிப் புதியதொரு அனலாக வளர்ந்ததுபோல் உருக்கொண்டாள். அவள் சொல்லிலும் செயலிலும் கொதிப்பும் கொந்தளிப்பும் எல்லை மீறின. அந்தக் கணம் தொட்டு ஒவ்வொன்ருகச் சொல்லிச் சொல்லிச் செய்துகாட்ட ஆரம்பித்தாள், அந்த விந்தைத் தொடர் இங்கே தான் தொடங்குகிறது.

### ஆயர்குலப் பெண்களிடம்

ஆயர்சேரிப் பெண்களை அழைத்தாள். "நீங்கள் எல்லோரும் கேட்டுக்கொள்ளுங்கள்" என்று சொல்லிவிட்டு வானத்துச் சூரியனை அழைத்தாள், அவனிடம் கேட்டாள்.

"காணிகா,
வாய்வதின் வந்த குரவையின் வந்து ஈண்டும்
ஆய மடமகளிர் எல்லீரும் கேட்டீமின்
ஆய மடமகளிர் எல்லீரும் கேட்டைக்க
பாய்திரை வேலிப் படுபொருள் நீஅறிதி
காய்கதிர்ச் செல்வனே! கள்வனோ என் கணவன்?

— துன்பமாலை : 46 – 51

வியக்கத்தக்க நிகழ்ச்சி நடந்தது. வெய்துயிர்த்து வெகுண்டு பேசிய கண்ணகியின் கேள்விக்கு விடை கிடைத்தது. இங்கேதான் கண்ணகியின் அமைதியான வாழ்க்கைப்போக்கில் அதிர்ச்சிதரும் மாறுதல் முதன்முதலாக ஏற்படுகிறது. வானொலியாக (அசரீரியாக) எதிரொலி கேட்டது. "உன் கணவன் கள்வன் அல்லன், இந்த ஊரை எரி உண்ணும்" என்ற பதில் வந்தது.

"கள்வனோ அல்லன் கருங்கயல்கண் மாதராய்
ஒள் எரி உண்ணும் இவ்வூர் என்றது ஒருகுரல்."

— துன்ப மாலை, 52–53

அப்போது முதல், வெறி பிடித்தவள் போல் மாறிவிட்ட அவளிடம் மறைந்து கிடந்த தெய்விக ஆற்றல்கள் ஒன்றன்பின் ஒன்றாக வெடித்து வெளிக் கிளம்பலாயின.

### மதுரை நகர மக்களிடம்

கதிரவன் உரையினால் உறுதி பெற்ற கண்ணகி அடுத்து மதுரை நகர மக்களிடம் என் கணவனைக் காட்டுங்கள், என்று அரற்றினாள். சூழ்ந்துநின்ற மக்களைப் பார்த்து வஞ்சினம் கூறினாள். "நான் என் கணவனைக் காண்பேன், கண்டு அவன் வாயிலிருந்து தீதில்லாத நல்ல உரை கேட்பேன், கேளாது போவேனேல் துன்பம் தரத்தக்க செயல்களைச் செய்தவளாக என்னைப் பிறர் எள்ளி நகையாடட்டும்," என்று வஞ்சினம் கூறினாள். இதுவே அவளுடைய கற்பின் திண்மையைப் படம் பிடித்துக் காட்டுவதாகும்.

மதுரை நகரத்து மக்கள் வெட்டுண்டு கிடந்த கோவலனைக் காட்டவே கண்ணகி அவனைக் கண்டாள். தன்னைப் பார்த்த கண்ணகியைக் கோவலன் பார்க்கவில்லை. மாலை மயங்கும் வேளையில் கணவன் கிடந்த இடத்தில் இருந்து கண்ணகி அரற்றிய ஓலம் ஊரெங்கும் பரவி நிறைந்தது.

கண்களைத் திறந்து தன்னைக் காணாத கணவனை நோக்கி அவள் பொங்கிப் புலம்பினாள். "என்னுடைய மிகுந்த துன்பத்தைக் கண்டு "இவள் எத்தகைய துன்பம் அடைந்துள்ளாள்" என்று, என்னைப் பார்த்து நீர் சொல்லவில்லையே! புனுகு, சந்தனம் பூசிய மேனி புழுதி படிந்து கிடக்கின்றதே. இக் கொலைக்குக் காரணம் என் தீவினைப் பயனே என்று இந்த நாட்டிலே யாரும் சொல்லமாட்டார்களோ! மலர்மாலை கிடந்த மார்பு மண் தரைமீது கிடக்கின்றதே! என்னுடைய கண்களில் கண்ணீர் வடிய உம்முடைய புண்களில் செந்நீர் வடிய, நடந்து விட்ட இந்தக் கொடுமைக்கு ஊழ்வினையே தவிர வேறொன்றும் காரணம் இல்லை. கோவலன் தவறு செய்யவில்லை, கோவேந்தன் பாண்டியனே தவறு செய்தான், என்று யாரேனும் இங்குக் கூறமாட்டார்களா? இங்கே பெண்டிர் இல்லையோ? இங்கே சான்றோர் இல்லையோ? இங்கே தெய்வம் இல்லையோ? என்று சொல்லிச் சொல்லிச் சோர்ந்து புலம்பினாள். பின்னர் அயர்ந்து, தளர்ந்து அன்பன் அகல் மார்பை ஆரத் தழுவிக்கொண்டாள். உடனே உயிர் பெற்றெழுந்தான் கோவலன். "முழுமதி போன்ற முகம் வாடி விட்டதே" என்று வாய் திறந்து பேசினான். அவள் கண்ணின் நீரைத் தன் கையால் துடைத்தான். அது கண்டு கண்ணகி அழுதபடியே இருகரம் கொண்டு அவன் இணையடி பற்றினாள். அவ்வேளை அவன் எழுந்து "எழுதிய நல்ல மலர் போலும் மையுண்ட கண்களை உடையாய்! இருப்பாயாக" என்று சொல்லி விட்டு வானவரோடு வானகம் சென்றான்.

"என்று இவை சொல்லி அழுவாள் கணவன் தன்
பொன் துஞ்சு மார்பம் பொருந்தத் தழீஇக்கொள்ள,
நின்றான் எழுந்து நிறைமதி வாள்முகம்
கன்றியது என்று அவள் கண்ணீர் கையால் மாற்ற,
அழுது ஏங்கி நிலத்தின் வீழ்ந்து ஆயிழையாள்,

தன் கணவன்

தொழுதகைய திருந்தடியைத்
துணை வளைக்கையால் பற்றப்

பழுதுஒழிந்து எழுந்திருந்தான்
பல் அமரர் குழாத்து உளான்

எழுது எழில் மலர் உண் கண்
இருந்தைக்க எனப் போனன்.

( ஊர் சூழ்வரி 60 - 67 )

மணவாளன் மறையக் கண்ட கண்ணகி, மாயமோ அன்றி மற்றேதோ என்று சிறிது சிந்தை கலங்கினள். அந்தக் கணத்திலே அவளுக்கு மின்னலிட்டது போல் மேலோர் நாள் பூம்புகாரில் வாழ்ந்த போது கண்ட கனவு நெஞ்சில் உதித்தது. அந்தக் கனவு நிகழ்ச்சி இப்போது உண்மையாகி வரவே மேலும் பலவும் தொடர்ந்து உண்மையாகும் என்று துணிவு கொண்டு காவலன் முன்னர் கட்டுரைக்க எண்ணிக் கண்ணீரைக் கூடத் துடைக்காமல் விரைந்தாள்.

இவ்வாறு மதுரை மக்களிடம் என் கணவனைக் காண்பேன், கண்டதும் அவன் வாயில் தீதற்ற சொற் கேட்பேன் என்று சொன்னபடி செய்து காட்டிவிட்டாள்.

## கோப்பெருந்தேவியிடம் கூறுகின்ற வஞ்சினம்

மாபெரும் துயரம் தன்னை வந்து அடைகின்ற வரையில் விரல் விட்டு எண்ணக்கூடிய அளவிற்கு மிகச் சிலவான சொற்களையே பேசக்கூடிய பெண்ணாகக் கண்ணகியைக் கண்ட நாம் கோவலன் வெட்டுண்ட செய்தி அறிந்தது முதல் அவள், இடைவிடாது பொங்கிப் பொங்கிப் பேசுகின்ற வீர பத்தினியாக மாறி விட்டதைப் பார்க்கிறோம். அத்தகைய சொல்லாற்றலுக்குச் சுடர் விடும் மாணிக்க மகுடம் வைத்தாற்போல அவள் தேரா மன்னன் தென்னவனோடு வாதாடி இறை முறை பிழைத்த செயலை எடுத்துக் காட்டிய திறன் அமைகிறது எனலாம். தவறிழைத்தவன் தானே என்று மன்னவன் ஒத்துக் கொள்கிறான்.

"பொன்செய் கொல்லன் தன்சொல் கேட்ட
யானோ அரசன்? யானே கள்வன்"

– வழக்குரை காதை : 74 – 75

என்று மரண வாக்குமூலம் கொடுத்து விட்டுக் "கெடுக என் ஆயுள்" என மன்னவன் மயங்கி வீழ்ந்தான்.

இது கண்டு குலைந்து நடுங்கி அரசன் அடி தொழுது வீழ்ந்த கோப்பெருந்தேவியின் முன்னர் சிலம்பின் வென்ற சேயிழையான கண்ணகி, பத்தினிப் பெண்டிர் பிறந்த பட்டினமாம் காவிரிப்பூம் பட்டினத்தில் பிறந்த நானும் அத்தகைய பத்தினி என்பது உண்மையானால் கோவேந்தன் தன்னோடு கோநகர் மதுரையையும் ஒழித்திடுவேன் என்று நெடுமொழி கூறினாள்.

"மட்டு ஆர் குழலார் பிறந்த பதிப்பிறந்தேன்
பட்டாங்கு யானும் ஓர் பத்தினியே ஆமாகில்
ஒட்டேன் அரசொடும் ஒழிப்பேன் மதுரையும் என்
பட்டிமையும் காண்குறுவாய் நீ ........."

வஞ்சினமாலை 35 – 38

சொல்லுதல் யார்க்கும் எளிது. சொல்லிய வண்ணம் செய்தலோ அரிதென்பர். செயற்கரிய செய்தாரைப் பெரியர் என்றும் பிரித்துப் பேசுவர். மாதரசி கண்ணகி நல்லாள் சூளுரைத்த வண்ணமே செய்து காட்டினாள். நான் மாடக் கூடலாம் மதுரை நகரத்து மகளிரை அழைத்தாள், மைந்தரை அழைத்தாள், வானத்துக் கடவுளரை அழைத்தாள், மாதவத் தோரையும் அழைத்தாள். அழைத்துச் சொன்னாள் "கேட்டுக் கொள்ளுங்கள், பேதையேன் காதலன் கோவலனுக்குப் பேரிடரும் பெரும்பழியும் தந்ததால், குற்றமில்லை என் செயலில் என் றெண்ணிக் கோநகரைச் சீறுகின்றேன்" என்று தனது இடது முலையைத் திருகி எடுத்தாள்.

"மட்டார் மறுகின் மணி முலையை வட்டித்து
விட்டாள் எறிந்தாள் விளங்கு இழையாள்."

— வஞ்சினமாலை 45 – 46.

தென்னன் மதுரையில் தீ எழுந்தது.

"பொற்றொடி ஏவப் புகை அழல் மண்டிற்றே
நல்தேரான் கூடல் நகர்."

— வஞ்சினமாலை 56 – 57.

மெய் நடுங்கச் செய்யும் இதனோடு அவள் செயல் நின்று விட வில்லை, மேலும் தொடர்கிறது.

## தெய்வமும் அஞ்சி ஏவல் கேட்டல்

அங்கி வானவன்
ஆணை கேட்டல்

பத்தினியார் பிறந்த பதியிலே பிறந்த கண்ணகி மணி முலையை வட்டித்து வீதியிலே எறிந்தபோது நீல நிற மேனியும் சிவந்த வண்ணச் சடையும் கொண்ட நெருப்புக் கடவுள் அவள் முன்னே தோன்றி மாபத்தினி! உனக்குத் தவறிழைத்த காலத்து இந்த ஊரை எரியூட்ட வேண்டும் என்று முன்னரே எனக்குக் கட்டளை உண்டு ( அதனால் இப்போது எரித்துவிடுவேன் ) தப்பிப் பிழைக்குமாறு காப்பாற்றப்பட வேண்டியவர்கள் யார் யார் என்று சொல்வாயாக என்று ஏவல் கேட்டு எதிர்நோக்கி நின்றான். அப்போது கண்ணகி :

"பார்ப்பார், அறவோர், பசு,பத் தினிப்பெண்டிர்
மூத்தோர், குழவி எனும் இவரைக் கைவிட்டுத்
தீத்திறத்தார் பக்கமே சேர்க............."

— வஞ்சினமாலை 53 – 55.

என்று அக்கினிக் கடவுளுக்கு ஆணையிடுகின்றாள் என்பதைப் பார்க்கும்போது தெய்வமும் பணியும் அளவிற்குத் திண்மை பெற்றவள் கண்ணகி என்பது தெளிவாகிறது.

பதிகாக்கும் தெய்வம்
பயந்து வேண்டுதல்

அக்கினிக் கடவுள் மட்டுமா ! மதுரை நகரின் காவல் தெய்வ மாகிய மதுராபதித் தெய்வமுமே கண்ணகிக்கு முன்வர அஞ்சிப் பின் பக்கமாக ஒதுங்கி வந்து நின்று இந்த நிலையைக் கண்ணகி அடைவதற்கான முன்வினை நிகழ்ச்சிகளை முறையாக முற்றிலும்

விளங்கக் கூறி "மதுரை நகரைப் பற்றிய தீ அடங்குமாறு செய்ய வேண்டும்" என்று கேட்டுக்கொள்கிருள். பத்தினியின் இசைவால் மதுரைக்குத் தீயின் கொடுமையிலின்றும் விடுதலை கிடைத்தது.

ஆணை கேட்டல் என்ப தோடன்றித் தெய்வமும் அஞ்சி வேண்டிக்கொள்ளும் நிலைக்குக் கண்ணகி உயர்ந்து விடுகிருள்.

## வானுலகம் நோக்கிய வழிச் செலவு

**கொற்றவையின்**
**கோயில் வாயிலில்**

இன்னும் பதினுன்கு நாட்கள் கழித்துத் தான் கோவலனைக் காண முடியும், அதுவும் மானிட வடிவில் காணமுடியாது, வானோர் வடிவிலேதான் காணமுடியும் என்ற செய்தியை மதுராபதித் தெய்வத்தின் மூலம் அறிந்து கொண்ட கண்ணகி இப்போது கொற்றவை கோயில் முன் வந்து நிற்கிருள்.

ஆய மடமகளிர் முன்னே, அணி மதுரை மக்கள் முன்னே, கோவேந்தன் தேவிமுன்னே என்று இவ்வாறு பலர் முன்னே வஞ்சினம் கூறி வாகை சூடிய கண்ணகி உணர்ச்சி வசப்பட்டு நாம் எங்கே நிற்கிரேம், யார் முன்னே பேசுகிரேம் என்பதை மறந்து "என்னுடைய கணவனைக் கண்ட பின் தான் ஓரிடத்தில் இருப்பேன் அல்லது நிற்பேன்" என்று சூளுரைத்துக் கொற்றவை வாயிலில் தன் வளையல்களை உடைக்கின்ருள். மதுரை நகரின் கீழ்த்திசை வாயில் வழியே கணவனேடு புகுந்த கண்ணகி இப்போது மேற்றிசை வாயில் வழியாகத் தனியளாக வெளியேறுகின்ருள்.

> "கருத்துறு கணவன் கண்டபின் அல்லது
> இருத்தலும் இல்லேன் நிற்றலும் இலன்எனக்
> கொற்றவை வாயில் பொன்தொடி தகர்த்துக்
> கீழ்த்திசை வாயில் கணவனெடு புகுந்தேன்
> மேல்திசை வாயில் வறியேன் பெயர்கு."
>
> — *கட்டுரை காதை.* (179–183)

கொற்றவன் முன்னே காற்சிலம்புடைத்தவள் கொற்றவை முன்னே கைவளை உடைத்தாள். உடைந்த நெஞ்சத்தோடு பள்ளமென்றும் மேடென்றும் பாராமல் இரவென்றும் பகலென்றும் எண்ணுமல் தொடர்ந்து நடக்கலானுள்.

**வேங்கை மரத்தடியில்**
**நிகழ்ந்த விந்தை**

கணவனைக் கண்ட பின்னர் தான் நிற்பேன் (அதுவரை நிற்க மாட்டேன்) என்று பேசிய நங்கை சேர நாட்டுத் திருச்செங்குன்றில் வேங்கை மரம் ஒன்றின் நிழலில் வந்து நின்றுள். பதினன்காம் நாள் தான் வந்து நின்றுள் என்றுலும் பதினன்கு நாட்கள் வரை நிற்கமாட்டேன் என்று சொல்லாமல் காதலனைக் கண்டாலன்றி நிற்கமாட்டேன் என்று சொன்னுள். இப்போது அவள் கோவலனைக் காணவில்லை. என்றுலும் நின்று விட்டாள். சொன்னபடி எல்லாம் செய்துகாட்டி விட்டதால் ஓங்கி நிலைத்த தன்னம்பிக்கை உணர்வு ஆணவமாக அரும்பலாமா? தெய்வமாகும் தகுதிகள் அனைத்தும் பெற்ற அவளை அந்நிலை அடையவிடாதபடி தடுத்தது அது ஒன்றே ஆகும். தடையாக நின்ற அந்த மாயையும் உடைபடும் காலம் வந்துவிட்டது. அதனுல் அங்கே நின்றுவிட்டாள். "நிற்கமாட்டேன் என்று சொன்னவள் நின்று விட்டாயே" என்று மறைமுகமாகக் கேட்பதுபோல் அங்கே வந்த குன்றக் குறவர்கள் கேட்கிறுர்கள். "மலை வேங்கை நறு நிழலில் வள்ளி போல்வீர்! மனம் நடுங்க முலை இழந்து வந்து நின்றீர் யாவிரோ......?"

— குன்றக்குரவை. (3–4)

மதுராபதித் தெய்வம் கூட முன்னே வர அஞ்சியதைச் சிறிது நேரத்திற்கு முன்னே பார்த்தோம். இப்போது இந்தக் குறவர்கள் எதிரே நின்று வினவுவதைக் காண்கிறுேம். தன் முனைப்பு அற்றுப்போகும் நேரம் வந்துவிட்டது. அதனுல் அவர்களிடம் கண்ணகி கோபித்துக் கொள்ளவில்லை. "முனியாதே" என்ற சொல்லை ஆசிரியர் பயன்படுத்துகிறுர் (குன்றக்குரவை – 4) இப்போது கண்ணகி மதுரையைத் **தான்** எரித்ததாகவே நினைக்கவில்லை. வினை விளை காலம் ஆதலின்

அப்படி ஏற்பட்டது என்று உணர்கிறுள். அந்த வேளையில் நான் அங்கே சென்று, கணவனை இழந்து, கருவியாகப் பயன் பட்டேன் என்ற பொருள்பட வேடர்களிடம் ஆல் றவிந்தடங்கிய சான்றேர் போலச் சொல்லுகிறுள். செய்த வினையை நினைத்து நொந்து கொள்கிறுள். வெள்ளைப்பரப்பிலே இருந்த ஒற்றைப் புள்ளி போன்ற முனைப்புணர்வும் அற்றுப் போகவே முற்றிலும் தூய தெய்வத் தன்மை அடைகிறுள். ஒவ்வொரு ஞானியர்க்கும் ஒவ் வொரு மரத்தடியில் ஞானஒளி தோன்றியதுபோல் கண்ணகிக்கு வேங்கை மரநிழலிலே ஞானம் பிறந்தது. உடனே வேடர்கள் அவளை வணங்குகிறுர்கள்.

அந்த ஒரு குறையும் மறைவதற்காகக் காத்திருந்தவர்போல் வானவரும் வந்திறங்கி மலர்மாரி பொழிந்து வள்ளிபோல வேங்கை மரத்தடியில் வந்து நின்ற கண்ணகியைச் செவ்வேள் போன்ற கோவலனுடன் கொண்டுசென்றனர்.

“என்றலும் இறைஞ்சி அஞ்சி இணைவளைக்கை எதிர்கூப்பி
நின்ற எல்லையுள் வானவரும் நெடுமாரி மலர் பொழிந்து
குன்றவரும் கண்டு நிற்பக்கொழுநனெடு கொண்டு போயினர்”
— குன்றக் குரவை ; 7 – 9

### குடமலையாட்டியாதல்

தங்கள் கட்புலம் காண விட்புலம் போன கண்ணகியைக் கண்ட குன்றக் குறவர்கள் அவள் எந்நாட்டாள் என்றும், யார் மகள் என்றும் அறியார் ஆயினும் அவளையே கண்கண்ட தெய்வமாக எண்ணினர்.

“நம்முடைய குலத்துக்கு இவளைப்போலச் சிறந்த தெய்வம் இல்லை, ஆதலால் இவளையே தெய்வமாகக் கொள்ளுங்கள். நல்ல மணம் தரும் மலர் நிறைந்த, கிளைகள் படர்ந்த, இந்த வேங்கை மரத்தின் கீழே ஒப்பற்ற தெய்வமாக நிறுத்துங்கள், தொண்டகப் பறையினை முழக்குங்கள் : சிறுபறையைக் கொட்டுங்கள் : கொம்பெடுத்து ஊதுங்கள் : மணி ஓசை செய்யுங்கள் : குறிஞ்சிப் பண்ணிலே பாடல்

பாடுங்கள் : மணமுள்ள புகையூட்டுங்கள் : பலியாக மலரிடுங்கள் : சுற்றுச் சுவர் எடுத்து வாயில் அமைத்து வாயாரப் புகழ்ந்து அந்தத் தெய்வத்தின் பெருமை பாடிப் போற்றுங்கள் : பல்வேறு மலரெடுத்துத் தூவுங்கள்". முலையொன்று இழந்தவளாகத் தங்கள் மலை தேடி வந்த தெய்வத்தை வழிபடுவதால் நலம் பலவும் பெருகும் என்று நம்பி இந்த முறையில் வழிபட்டு மகிழ்ச்சி பொங்கக் கூடிப்பாடிக் குரவையாடினர். இவ்வண்ணம் திருமா பத்தினி குடமலையாட்டியாக முதன்முதலில் வழிபடு தெய்வமானாள்.

### கொங்கச் செல்வியாதல்

"கொங்கிளங் கோசர் தங்கள் நாட்டகத்து நங்கைக்கு விழவொடு சாந்தி செய்ய மழை தொழில் என்றும் மாறாதாயிற்று."

(உரை பெறு கட்டுரை)

### தென்தமிழ்ப் பாவையாதல்

"பாண்டிய நாடு மழை வறங்கூர்ந்து, வறுமை எய்தி, வெப்பு நோயும் குருவும் (கொப்புளம்) தொடரக் (தென் தமிழ் நாட்டில்) கொற்கையில் இருந்த வெற்றி வேற் செழியன் நங்கைக்குப் பொற் கொல்லர் ஆயிரவரைக் கொன்று களவேள்வியால் விழவொடு சாந்திசெய்ய, நாடு வளம் மலிய மழை பெய்து நோயும் துன்பமும் நீங்கியது"

(உரை பெறு கட்டுரை)

### வளவர் நாட்டில் வழிபாடு

"சோழன் பெருங்கிள்ளி கோழியகத்து எத்திறத்தாலும் வரம் தரும் இவள் ஒரு பத்தினிக் கடவுளாகும் என நங்கைக்குப் பத்தினிக் கோட்டமும் சமைத்து நித்தல் விழா அணி நிகழ்வித்தோனே"

— (உரைபெறு கட்டுரை)

### தென்னிலங்கையில் திருமாமணி

"கடல் சூழ் இலங்கைக் கயவாகு என்பான் நங்கைக்கு நாட்பலி பீடிகைக் கோட்டம் முந்துறுத்து ஆங்கு அரந்தை கெடுத்து வரம் தரும் இவள் என ஆடித்திங்கள் அகவையின் ஆங்கு ஓர் பாடி விழாக்கோள் பன்முறை எடுப்ப, மழை .வீற்றிருந்து வளம்பல பெருகிப் பிழையா விளையுள் நாடாயிற்று.

( உரை பெறு கட்டுரை )

இவ்வாறு பலர் புகழ் பத்தினியான கண்ணகிக்குச் சாலச் சிறந்த முறையில் வழிபாடு நிகழ்த்த எண்ணிப் பேரரசன் சேரன் செங்குட்டுவன் பத்தினிக் கடவுள் படிமம் சமைக்க இமயத்தில் கல்லெடுத்துக் கங்கையிலே நீராட்டிப் பத்தினியின் படிமம் பாங்குறப் பொலிந்து அதைப் பண்புற எடுத்த பத்தினிக் கோட்டத்திற் கடவுள் மங்கலம் செய்தனன்.

### வானுறையும் தெய்வம்

வையத்து வாழ்வாங்கு வாழ்ந்த கண்ணகி வானுறையும் தெய்வமாகிய செய்தி, சேரன் செங்குட்டுவன் செய்த வழிபாட்டின் போது வெளியாகியது. சிறப்புச் செய்த சேரன் கண்ணெதிரே வான் வெளியில் கண்ணகி தெய்வ வடிவில் தோற்றம் அளித்தாள். நகையிழந்து முலையிழந்து நறுவேங்கை மர நிழலில் நின்றது போலன்றிப் பொன் அணி முற்றும் பூண்டு பூரண அழகுடன் காட்சி தந்தாள். கண்ணரைக் கண்ட காவலன் செங்குட்டுவன் வியந்து,

"என்னே! இஃது என்னே! இஃது என்னே! இஃது என்னேகொல்
பொன்னஞ் சிலம்பின் புனைமே கலைவளைக்கை
நல்வயிரப் பொன் தோட்டு நாவலம் பொன் இழைசேர்
மின்னுக் கொடி ஒன்று மீவிசும்பில் தோன்றுமால்."

என்று பாடிப் பரவி நின்றான்.

**பிறந்த பதியாம் பூம்புகாரில்
பத்தினிக்கோட்டம்**

அதன் பின்னர் தமிழகத்தும், பிற நாட்டகத்தும் பத்தினிக் கடவுளாய்ப் படிமம் வைத்தும், பீடம் நிறுவியும், கண்ணகியை வழிபட்டு மகிழ்ந்த செய்திகள் பல. ஆனல் அவற்றில் ஒன்றேனும் இன்று அப்படியே நின்று நிலவக் காண்கின்றே மில்லே. தொல் பொருள் ஆய்வாளர் ஆராய்ச்சியின் பயனுய்ச் சிற்சில வெளிப் பட்டாலும் "கண்ணகி கோயில்" "பத்தினிக்கோட்டம்" என்ற பெயரால் நேற்றுவரை தமிழகத்தில் ஏதொன்றும் காணக் கிடைக்கவில்லே. திருமதி கௌரியம்மாள் - இராமலிங்கம் அவர்களின் திருப்பணியால் இன்று, பிறந்த பதியாம் பூம்புகாரில் பத்தினிக் கோட்டம் நிமிர்ந்து நிற்கிறது.

-0-

# பத்தினிக் கோட்டம்

கம்பன் அடிப்பொடி, சா. கணேசன்.



"கற்பு என்னும் திண்மை உண்டாகப்பெறின் பெண்ணின் பெருந்தக்க யா உள?" என்பான் வள்ளுவப் பேராசான். இதற்கு ஓர் ஒப்பற்ற இலக்கியமாகத் திகழ்பவள் சோழ மண்ணில் தோன்றிப் பாண்டிப் பதியில் கற்புத்திறம் காட்டிச் சேரன் கோட்டில் தெய்வம் ஆன கண்ணகிப் பெருமாட்டி ஆவாள்.

காகந்தி என்றும், பூம்புகார் என்றும், பெயர்பெற்ற காவிரிப்பூம்பட்டினத்தில் பிறந்தாள். எல்லா நலன்களும் நிரம்பப் பெற்ற கருணை மறவனும் கோவலனை மணம் பூண்டாள். அருங்கலைச் செல்வி மாதவிபால் கொண்ட காதற்பெருக்கால் பிரிந்த காதற் கொழுநன் மீண்டு தன்பால் உற்றபோது அவன் குறை தீர்க்க அவனொடும் வாழ்வு கருதி மதுரை வந்தடைந்தாள். முன்னை ஊழ் வினையினாலே கோவலன் கொலைக்களப்பட்டான். கணவனை இழந்த கண்ணகி கடுந்துயர் உழந்து, வழக்குரைத்து, மன்னவன் பிழையுணர்த்தி, மணவாளன் குற்றம் அற்றவன் என நிறுவி, தன்னுடைய அற்புதக் கற்பினைப் பொற்புறக் காட்டி, மதுரை மாநகரை எரியுணச் செய்தாள்.

அதன்பின்னர் நாட்கள் பதினான்கும் நடத்தலே புரிந்து, பதினைந்தாம் நாள் ஆடித்திங்கள் அனுடநாள் சப்தமிப் பிறையில் நெடுவேள்குன்றம் என்னும் செங்குன்றில் ஏறி, வேங்கை மர நிழலில் நின்றாள். வானவர் பெருமக்கள் கோவலனுடன் வந்தனர். வந்த வானவர் கண்ணகியின் பீடும், பெயரும் கூறி வாழ்த்தி மலர் தூவிப் போற்றிப் புகழ்ந்து வரவேற்றனர். எல்லாக்

## திருப்பணி ஆற்றிய சீலர்கள்



தாசில்பண்ணை
கௌரியம்மாள் இராமலிங்கம்



பூதலத்தே பிறந்திட்டு மறையும் பாங்கில்
பொன்மகளாம் கண்ணகியைப் புகாரென் ருேதும்
மாதலத்தே மாநாய்கன் அவனின் இல்லாள்
மாதவத்தால் தந்திட்டார்; ஆனுல் இன்று
பூதலத்தே வீற்றிருக்கும் திருவைப் போலும்
புகழ்சௌரி இராமலிங்கம், என்றும் மக்கள்
நாதலத்தே வீற்றிருக்க மறையாப் பாங்கில்
நன்மகளைத் தந்திட்டார் வாழ்க! வாழ்க!

குறையும் நீங்கி எல்லையிலா மனநிறைவுடன் மண்ணக மாதர்க்கு அணியாய கண்ணகி, தெய்வம் ஆகி, விண்ணக மாதர்க்கு விருந்தாக விமானம் ஏறிக் கோவலனுடன் வானநாடு ஏகினாள்.

அந்தச் செய்திகளை எல்லாம், அப்பொழுது பேரியாற்றங் கரையில் மலைவளம் காணவந்து தங்கியிருந்த செங்குட்டுவன் கேள்விப்பட்டான். தன் கோப்பெருந் தேவி வேண்மாளுடன் நடந்தவற்றைக் கூறி, "பாண்டியனுடன் உயிர்துறந்த பாண்டிமாதேவியையும், கடுந்துயருழந்த பின்னர் கணவனைச் சேர்ந்த கண்ணகியையும் பார்க்கும்பொழுது எவர் சிறந்தவர் ?" என வினவினான்.

"கணவன் விழக் கண்ட அக்கணமே தன்னுயிர் பிரியத் தரையில் வீழ்ந்த பாண்டிமாதேவி விண்ணுலகில் பெருஞ்சிறப்பை அடையட்டும்! நமது நாட்டை வந்துசேர்ந்த இப் பத்தினிக் கடவுளை நாம் பரவுதல் வேண்டும்" என்று விடையிறுத்தாள் வேண்மாள்.

அவ்வுரை கேட்ட சேரன் செங்குட்டுவன் பத்தினிக் கோட்டத்தை எத்தனையோ நூற்றாண்டுகட்கு முன்னர், கண்ணகித்தாய் கடைசியாகக் கால் பரவி நின்ற இடத்தில், கவினுறச் சமைத்தான். அதைக் கண்ட மன்னர் பிறரும் தத்தம் நாடுகளில் பத்தினிக் கோட்டத்தை எழுப்பி அங்கெல்லாம் கண்ணகியின் படிமத்தைக் கடவுண்மங்கலம் செய்தனர். அவை யெல்லாம் இன்று செய்தியாய், பழங்கதையாய்விட்டன; பழம் பொருள் ஆய்வுத்துறைக்கும் ஒருபொருளாய் ஆயின.

கற்கோயிலைப் போலவே ஓர் அற்புதச் சொற்கோயிலையும் பெற்றாள் கண்ணகிப் பெருமாட்டி. அக்கோயிலை ஆக்கிய பெருமானை இளங்கோ என்று ஏத்திப்பரவும் அறிஞர் உலகம். அந்தக் கற்கோயில்களைப் போலவே இந்தச் சொற்கோயிலும் சிதிலமாகத் தொடங்கிற்று. கட்புலனுக்கும் எட்டாமல் கரந்துறைந்த சொற்கோயில்தான் சிலப்பதிகாரம்.

தமிழ்த் தாயார் நேற்றுப் பெற்ற தன்னேர் இல்லாத் தனிமகன், உத்தமதானபுரம் உபகரித்த ஒரு தனிச் செம்மல், உ. வே. சாமிநாதய்யர் அரும்பாடு பட்டு இந்தச் சொற்கோயிலே யாவரும், கண்டு, கேட்டு உண்டு உவந்திடுமாறு வெளிப்படுத்தி யருளினர். அப்பெருமகனரின் திருப்பணியால் தமிழ் உலகம் பெரும் பயன் அடைந்தது. அவர்க்குத் தமிழச்சாதி என்றென்றும் நன்றிக்கடன் பட்டிருக்கிறது.

இந்தச் சொற்கோயிலே வலம்வந்தே பல பக்தர்கள் உட் சென்று கண்ணகித் தெய்வத்தைக் கருத்தால் கண்டு கைதொழலாயினர். ஆனல் கண்ணுற் கண்டு கைதொழ ஒரு கோயிலும் இன்றில்லே. கண்ணகி கோயில்தான் என்று நல்லறிஞர்கள் அறுதியிட்டுக் கூறும் கோயில்களும் பலவேறு அம்மன் கோயில்களாகவே ஆகி இன்று கொற்றவை வழிபாட்டிற்கு உரியனவாய் இருக்கின்றன. பூம்புகாரிலும் பத்தினிக் கோட்டம் ஒன்று இருந்திருக்கத்தான் வேண்டும். அதற்குரிய சான்றுகள் ஏதும் கிடைக்காத நிலேயில் உறுதியாக ஒன்றும் கூறமுடியவில்லே. பிறபல கோயில்கள் முதலியவற்றைப் போலக் கண்ணகி கோயிலும் சிதைவாலோ அன்றிக் கடல்கோளாலோ மறைத்தும் போயிருக்கலாம். அஃது எப்படியேனும் ஆகட்டும்!

எங்ஙனம் உ. வே. சாமிநாதய்யரால் சொற்கோயிலாம் சிலப்பதிகாரம் நமக்குக் கிடைத்ததோ அங்ஙனமே, காவிரிப்பூம் பட்டினத்து, மேலேயூர் தாசில் பண்ணேயால் கற்கோயிலாம் பத்தினிக் கோட்டத்தையும் நாம் பெற்று மகிழ்கிறேம். 1951ல் டாக்டர் ஆர். கே. சண்முகம் செட்டியார் தலேமையில் பூம்புகாரில் சிலப்பதிகார விழா சிறப்புப்பெற நிகழ்ந்தது. வரவேற்புக் கழகத் தலேவராகத் தாசில் பண்ணே அதிபர் அமரர் கே. எஸ். ராமலிங்கம் அவர்கள் விளங்கினர். அவர் அவ் விழாவில் கண்ணகிக்குக் கோயில் எழுப்புவதாக உறுதிபூண்டார். சிற்பநூல் நெறிப்படி கண்ணகி படிமம் செய்ய எளியோன் ஆலோசனேயை விரும்பினர். மாமல்லபுரத்துச் சிற்பக் கூடத்துப் பெருந்தச்சராய் விளங்கும் திரு. வி. கணபதிஸ்தபதியார் பொறுப்பேற்று உத்தம லட்சணங் களுடன் கண்ணகி படிமத்தைச் சித்திரித்தார். உலகத் தமிழ் மாநாட்டில், கலேக்காட்சி கூடத்தில், அரும்பொருள் பலவற்றின்

நடுவில், அப்படிமம் கொலுவீற்றிருந்து அறவோர், அறிஞர், கலைஞர், ஆராய்ச்சியாளர் முதலிய பல்லோர் கண்களையும், கருத்தையும் ஈர்த்து நின்றது. கண்டோர் யாவரும் வியந்து பாராட்டி மகிழ்ந்தனர்.

அதன் பிறகு முறைப்படி, நீர்ப்படை (ஜலவாசம்) கூலப் படை (தான்யவாசம்) முதலியன செய்யப்பெற்றுச் சுமார் மூன்றுண்டுகட்குமேல் தாசில் பண்ணையில் இருந்தது.

கண்ணகிப் பெருமாட்டியின் கீர்த்திக்கும் சிற்பத் திருவுருவின் சிறப்புக்கும் ஏற்ற வகையில் புனிதமான – பவுத்திரமான திருக்கோயில் சமைக்கப்பெற்றது. ஆயாதிப் பொருத்தம் முதல் அமைப்பு எல்லாம் பரம்பரைச் சிற்பாசாரியார் ஆன திரு. கணபதி ஸ்தபதியார் திட்டமாகும். தலத்தில் தலைமை ஸ்தபதியாய் இருந்து பணியாற்றியவர். அவர் இளவல் இராமச்சந்திர ஸ்தபதியாராவார்.

திருப்பணி நிறைவேறி 8–6–72ல் ஆகம நெறிப்படி கடவுண் மங்கலமும் குடநீராட்டும் மிகச்சிறப்பாகச் செவ்விதின் நிறைவேறிற்று.

தம் அருமைக் கணவர் கூறியதை மேலையூர்த் தாசில் பண்ணை அறப்பெரும் செல்வி கௌரி அம்மாள் அருமையாக நிறைவு செய்துள்ளார். அல்லும் பகலும் அதே நினைவாயிருந்து, பெரும் பொருள் சொரிந்து அரும்பணி ஆற்றிய அவர்களின் ஈடுபாட்டை, சிரத்தையை, எத்துணைப் பாராட்டினும் தகும். கற்புக்கடவுள் கண்ணகிக்கு அப்பெருமாட்டி பிறந்த பெரும்பதியில் தெய்வத் திருகோயில் எழுப்பி அதிலே அவளை வீற்றிருந்து அருள் சுரக்கச் செய்த அருமை உலகம் உள்ளவரை நின்று நிலவும்.

இன்று கண்ணகித் தாய்க்குப் பத்தினிக்கோட்டம் ஏதும் எங்கும் இல்லையே என்ற குறை நீங்கச் செய்த கௌரி அம்மாள் அவர்களையும், அவர்களின் அரும்பணிக்கெல்லாம் ஆர்வமுடன் துணை நின்று ஆணை வழிச்செயலாற்றும் நற்குணநம்பி திரு.

ஆர். ராஜசேகரன் அவர்களையும் நாட்டோர் சார்பாக, நல்லோர் சார்பாக, இலக்கிய ரசிகர்களின் சார்பாக, மனமார, வாய்மணக்கப் பாராட்டி வாழ்த்தி மகிழ்கிறேன்.

இத்திருப்பணியில் தொடக்கம் முதலாக எளியேனுக்கும் தொண்டாற்ற வாய்ப்பிருந்ததன் காரணமாகத் திருக்கோயிலின்— ஆம்; பத்தினிக்கோட்டத்தின் – சிறப்பமைதிகளைச் சிறிது கூறியமைவேன்.

பத்தினிக்கோட்டம் முற்றிலும் கருங்கல்லால் ஆன கட்டுமானம்; சதுர அமைப்புடையது; விமானமும் சதுரமானது. இந்த விமான அமைப்பு மிகப் பழமையானதாகும். இவ்வகை விமானங்கள் தற்பொழுது எங்கும் காண இயலாததாகும். இது வைக்கோல் வேய்ந்து முகடு கூட்டிய முறையில் காணப்படும். முகட்டின் அடிப்பாகம் நான்கினும் கோடிப்பாளி அமைந் திருக்கும். விமானத்தின் நான்கு மூலைகளிலும் கர்ணகூடம் விளங்கும். கோட்டத்தின் நாற்புறத்தும் தோரணம் மிளிரும். இது "வையக மானம்" எனப்பெயர் பெறும். இவ்விமானம் அமைப்பதற்கு அடிப்படை முன்மாதிரியாக, மாமல்லபுரத்தில், "துரோபதை ரதம்" என்று கூறப்படும் "கூர்ச்சகுடில்" (புல்லகம்) கொள்ளப்பெற்றது. அதன் அமைப்புடன் வேண்டும் விகற்பங்களும் சேர்த்தமைக்கப்பெற்றது. அங்ஙனம் சேர்க்கும் பொழுது சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவற்றுள் காணப் பெறும் சிற்ப அமைதிகளை மனத்திற்கொண்டு அவற்றை முடிந்த அளவுக்குத் தழுவிக்கொள்ளப் பெற்றது.

இந்த விமானத்தை ஏன் மேற்கொண்டோம் என்றால், மிகப் பழைய வரலாற்றுப் பாத்திரத்திற்கு அமைக்கப்படும் கோட்டம் நவீன அமைதியைப் பெற்றுவிடலாகாது என்ற எண்ணந்தான். அங்ஙனமே கண்ணகிக்குத் திருவுரு அமைக்கும் போதும் பெருங்கவனம் செலுத்தப்பெற்றது. ஆடை, அணி முதலியயாவும் அக்காலத்திற்கேற்ற, நூல்வழிக் கண்ட வண்ணமே சித்திரிக்கப் பெற்றன.

கண்ணகி சிலையைச் சிறிது ஆழ்ந்து நோக்கலாம். சினம் முழுதும் அடங்கிச் செந்தண்மை பூண்ட சிந்தையளாய் திருவாயில் சிறுமுறுவல் அரும்பச் சிலம்பொன்று திருக்கரத்தை அணிசெய்யத் திகழ்கிருள் கண்ணகித்தாய். ஆம், வழக்குரைத்து, வாதில் வென்று, வளநகரை எரியூட்டிய பின் காதற்கணவனைக் கண்டு ககன மாந்தர் வாழ்த்தி ஏத்தக் கடுஞ்சினம் அடங்கிக் களிப்பினேடு வானூர்தியில் ஏறி விண்ணகம் சென்ற தெய்வத் தாயன்றோ?

தென்னவன் தீது இலன்; தேவர்கோன் – தன் கோயில்
நல்விருந்து ஆயினன்; நான் அவன்தன் மகள்

என்று உவகை பொங்க உரைத்த கொங்கச்செல்வி குடமலை யாட்டியாய் நின்று,

"வென்வேலான் குன்றில் விளையாட்டு யான்அகலேன்;
என்னேடும், தோழிமீர்! எல்லீரும் வம், எல்லாம்"

என்றும் அழைத்து, எல்லோருடைய ஆடல் பாடல்களை எல்லாம் கண்டு கேட்டுக் களித்து,

"நீடூழி, செங்குட்டுவன், வாழ்க!"

என்றும் மனமார வாழ்த்தி மகிழ்ந்தவள் அல்லவா? ஆகவே குறுநகையும், அருள்விழியும் அணிமுழுதுடைமையும் கொண்டு வந்தோரை எல்லாம், வணங்கினேரை எல்லாம் வாழ்த்தி வரந்தரக் காத்து நிற்கின்ருள்.

காவிரிப்பூம் பட்டினம் வருவாரை எல்லாம் வாழ்த்தி, வரந்தர

"காகந்தி நல்நகரைக் காலம்எல்லாம் யான் அகலேன்
என்னைத் தொழுதிறைஞ்ச எல்லீரும் வம்எல்லாம்"

என்று கூறி அழைக்கின்ருள். பூம்புகார் செல்வோர் எவரும் முதலில் பத்தினிக்கோட்டத்தில் கற்புத் தெய்வத்தை வழிபட்டு வரங்கொண்டபின்னரே மற்றெங்கும் செல்லமுடியும். ஆம்; அப்படிப்பட்ட முன் இடத்தை, முதல் இடத்தைத் தேடிக்கொண்டுவிட்டாள் பத்தினிக் கடவுள்!

வாழ்க பத்தினிக்கோட்டம்
வாழ்க தாசில் பண்ணை.

—[o]—

# அடிகளார் அறவுரை

"தெரிவுறக் கேட்ட திருத்தரு நல்லீர்!
பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்;
தெய்வம் தெளிமின்; தெளிந்தோர்ப் பேணுமின்;
பொய்யுரை அஞ்சுமின்; புறஞ்சொல் போற்றுமின்;

ஊனூண் துறமின்; உயிர்க்கொலை நீங்குமின்;
தானஞ் செய்மின்; தவம்பல தாங்குமின்;
செய்ந்நன்றி கொல்லன்மின்; தீநட்பு இகழ்மின்
பொய்க்கரி போகன்மின்; பொருண்மொழி நீங்கன்மின்;

அறவோ ரவைக்களம் அகலா தணுகுமின்;
பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்;
பிறர்மனை அஞ்சுமின்; பிழையுயிர் ஓம்புமின்;
அறமனை காமின்; அல்லவை கடிமின்;

கள்ளும், களவும், காமமும், பொய்யும்,
வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்;
இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா
உளநாள் வரையாது ஒல்லுவது ஒழியாது;

செல்லும் தேஎத்துக்கு உறுதுணை தேடுமின்;
மல்லல்மா ஞாலத்து வாழ்வீர் ஈங்கென்!"

